॥ श्रीः ॥

HARI SARVOTHAMA

SREE MOOLARAMO VIJAYATHAE

VAYU JEEVOTHAMA



SRI RAGHAVENDRA SWAMI SEVA SAMITHI

VIRUPAKSHIPURAM, DHARMAPURI-636 702

॥ श्रीः ॥

ஹரி ஸர்வோத்தம: வாயு ஜீவோத்தம:

ஸ்ரீ மூலராமோ விஜயதே



# ஸ்ரீ ஸுந்தர காண்டம்
# ஸ்ரீமத் த்வாதஸ ஸ்தோத்ரம்
# ஸ்ரீமத் அணுபாஷ்யம்

" ஸ்ரீமத் ஆனந்ததீர்த்த பகவத் பாதாசார்யரால் "
இயற்றப்பட்டது




பதிப்பாளர் :

**ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமி ஸேவா ஸமிதி**

விருபாக்ஷிபுரம், தர்மபுரி - 636 702

**1985**

நூல் வெளிவிடுபவர் :

ஸ்ரீ ராகவேந்தர குருவம்ஸபூஷண, வித்யாதி ராஜ,
வித்யாவாசஸ்பதி, வித்யா ரத்ன,
ஸரஸ்வதி கண்ட்டாபரண பண்டித ராஜ

**ஸ்ரீ ராஜா S. குருராஜாசார்ய:**

ஸ்தாபக – ஸம்பாதக
பரிமளா ஸம்ஸோதன & ப்ரகாஸன மந்திரம்
நஞ்ஜன்கூடு, மைசூர்.



இடம் :

ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமி மடம்
துளஸிங்கபெருமாள் கோவில் தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை – 600 005.



நாள் :

விஜய தஸமி - மத்வ ஜயந்தி
23–10–1985

|| ஹரி: ஓம் ||

ஹரி ஸர்வோத்தம: | வாயு ஜீவோத்தம: |



अभ्रमं भङ्गरहितं अजडं विमलं सदा ।
आनन्दतीर्थमतुलं भजे तापत्रयापहम् ॥

அப்ரமம் பங்கரஹிதம் அஜடம் விமலம் ஸதா |
ஆனந்ததீர்த்த மதுலம் பஜே தாபத்ரயா பஹம் ||

# விக்ஞாபனம்

ஆஸ்தீக மஹா ஜனங்களே, நமஸ்காரம்.

பக்தர்களின் ஆன்மீகத் தேவைகளையும், ஸ்ரீ ஹரி வாயு குருகளின் பாரமார்த்திக ஸேவையையும் மனதில் கொண்டு ஏற்படுத்தப்பட்ட எங்கள் ஸமிதியின் "த்வைத மத ஸித்தாந்த க்ரந்தங்களை ப்ரஸாரித்தல்" எனும் நல்ல கொள்கைகளுக்கு ஏற்ப, ஸ்ரீமத் ஆசார்யர் "மத்வரின் ஜயந்தி" தினமாகிய விஜய தசமி எனும் நன்னாளில் (23-10-85) இந்த ஸமிதியின் முதல் வெளியீடான இந்த நன்னூலை ஸ்ரீமதானந்த தீர்த்த பகவத் பாதாசார்யரின் அந்தர்கதரான ஸ்ரீலக்ஷ்மீ நாராயணரின் பாதகமலங்களில் ஸாஷ்டாங்கமாக வணங்கி காணிக்கையாக ஸமர்ப்பிக்கிறோம்.

இந்த ஸமிதியின் வளர்ச்சி நிதியின் பொருட்டும், ஸமிதியின் இன்னும் அனேக நல்ல கொள்கைகளை செயலாக்கும் பொருட்டும், இந்த புத்தகத்திற்கு விலையை நிர்ணயித்திருக்கிறோம்.

ஆஸ்தீக மஹா ஜனங்கள் வீட்டிற்கு ஒரு புத்தகம் என்னும் வகையில் இதை விலை கொடுத்து வாங்கி. வாஸித்து, பயனடைவதோடல்லாமல்; இதை தங்கள் இல்லங்களில் வரும் தலைமுறையினருக்கு என்று பாதுகாத்து வைக்கவேண்டும் என்றும் வேண்டுகிறோம்.

இதேபோன்று இன்னும் அனேக "த்வைத மத க்ரந்தங்களை" வெளியிட எங்களுக்கு ஆதரவும் உற்சாகமும் தந்து உதவிட பக்தர்களாகிய உங்களையும் பக்த பராதீனராகிய ஸ்ரீமன் மத்வாசார்யரின் ஹ்ருத் கமல வாஸியான ஸ்ரீலக்ஷ்மீ நாராயணரையும் நமஸ்கரித்து வேண்டுகிறோம்.

விருபாக்ஷிபுரம்
தர்மபுரி-636 702
23-10-1985

N. ராகவேந்திரன், B.Com., B.L.
தலைவர்
ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமி ஸேவா ஸமிதி

# நன்றியுரை



ஸ்ரீமன் மத்வாசார்யரால் இயற்றப்பட்ட 37 க்ரந்தங்களில் மிகவும் விஸேஷமானதும், பாராயணத்திற்கு முக்கியமானவையுமான (1) ஸ்ரீமன் மஹா பாரத தாத்பர்ய நிர்ணயத்தின் ஸ்ரீராம கதா நிருபணத்தில் ஸப்தமோத்யாயமான "ஸுந்தர காண்டம்", (2) ஸ்ரீமத் த்வாதஸ ஸ்தோத்ரம், (3) ஸ்ரீமத் அணுபாஷ்யம் எனும் இம்மூன்று க்ரந்தங்களை பாமரர்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் ஸுலப நடையில் தமிழ் பொழிப்புரையை அளித்து இம் மூன்று க்ரந்தங்களை இதற்கு முன்பே அச்சிட்டு வெளியிட்டு ஸ்ரீ ஹரி, வாயு, குருகளுக்கு ஸேவை செய்து, அவர்களின் ப்ரீதிக்கு பாத்திரர்களாகியிருப்பதோடல்லாது, நம் ஸமூகத்தினருக்கு மகத்தான தொண்டாற்றியிருக்கும், நாச்சியார் கோவில் ஹரி குரு பக்தர் ஸ்ரீமான் புருஷோத்தம N. S. ரங்காச்சார் மற்றும் கும்பகோணம் ஸரஸகவி ஸ்ரீமான் R. அப்பண்ணாச்சார், B A.,B.T. ராஷ்ட்ர பாஷா விஸாரத் ஆகிய இவ்விரு பெரியவர்களுக்கும் நாம் என்றென்றும் கடமைபட்டவர்களாகிறோம்.

மேன்மேலும் ஸ்ரீஹரி, வாயு, குருகளின் ஸேவை செய்வதுடன், நம் ஸமூகத்திற்கு உதவி செய்யும் வகையில் இவர்களுக்கு நல்ல ஆரோக்யத்தையும், தீர்க்க ஆயுளையும்

அளித்து அருள் பாலிக்குமாறு ஸ்ரீ ஸ்ரீராகவேந்த்ர குர்வந்தர்யாமி பாரதீ ரமண முக்ய ப்ராணாந்தர்கத ஸீதாபதி ஸ்ரீமூல ராமசந்த்ரஸ்வாமியை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து வேண்டிக்கொள்கிறோம்.

மேலும் எங்கள் ஸேவா ஸமிதியின் வளர்ச்சி நிதிக்காகவும், மாத்வ ஸமூக ஸேவையின் பொருட்டும், இம் மூன்று க்ரந்தங்களை அச்சிட்டு வெளியிட எங்களுக்கு நல்லாஸிகளை வழங்கி ஊக்குவித்த இவ்விரு பெரியவர்களுக்கு எங்களது மனமார்ந்த நன்றியுடன் கூடிய நமஸ்காரங்களை தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூலை குறுகிய காலத்திற்குள் சிறந்த முறையில் அச்சடித்து தந்து உதவிய சென்னை, கிழக்குத் தாம்பரம், விஜயா பிரஸ் நிறுவனத்தாருக்கும் இந்தப் புத்தகத்தை வெளியிட இன்னும் அனேக வகைகளில் உதவி செய்த பக்தர்களுக்கும் எங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

விருபாக்ஷிபுரம்
தர்மபுரி-636 702
23—10—1985

ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமி
ஸேவா ஸமிதி

॥ श्रीः ॥

# ஸ்ரீ ஸுந்தர காண்டம்

---

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தின் மஹிமையை யாவரும் அறிவார்கள். அதிலும் ஸுந்தர காண்டத்தின் பெருமை நாம் அனுபவத்தில் கண்ட உண்மையாகும். ஸுந்தர காண்டத்தின் கதாநாயகன் ஹனுமான். அவரது அவதாரமாகிய ஸ்ரீமத் ஆனந்த தீர்த்த பகவத் பாதாள் அவர்களே அந்தக் கதையை எழுதுவதென்ருல் எப்படியிருக்கும்? சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்ததைப் போலத்தான்.

அந்த அமுதத்தை ஆஸ்திக மஹா ஜனங்களுக்கு அள்ளி அளிக்க வேண்டுமென்ற விருப்பத்துடன் இப் புத்தகம் வெளியிடப்பட்டுள்ளது.

இதை தினமும் பாராயணம் செய்து வருவதால் இஹ பர ஸம்பத்துகள் கிட்டும்.

பொருளறிந்து பாராயணம் செய்வதே விசேஷம் என்ற நோக்கத்துடன் தமிழில் பொழிப்புரையும் கொடுக்கப் பட்டுள்ளது.

விருபாக்ஷிபுரம்
தர்மபுரி
23—10—1985

இப்படிக்கு,
**ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமி ஸேவா ஸமிதி**

|| ஶ்ரீ: ||



தத: ஸ ப்ரயதோ வ்ருத்தோ வஸிஷ்டோ
ப்ராம்மணை: ஸஹ |
ராமம் ரத்னமயே பீடே ஸஹஸீதம் ந்யவேஸயத் ||
வஸிஷ்டோ வாமதேவஸ்ச ஜாபாலி ரத காஸ்யப: |
காத்யாயன: ஸுயக்ஞஸ்ச கௌதமோ விஜயஸ்ததா ||
அப்யஷிஞ்சன்னரவ்யாக்ரம் ப்ரஸன்னேன ஸுகந்தினா |
ஸலிலேன ஸஹஸ்ராக்ஷம் வஸவோ வாஸவம் யதா ||

॥ श्रीः ॥





प्रथमो हनुमान्नाम द्वितीयो भीम एव च ।
पूर्णप्रज्ञस्तृतीयस्तु भगवत्कार्यसाधकः ॥

ப்ரதமோ ஹனுமான்னும த்விதீயோ பீம ஏவச ।
பூர்ண ப்ரக்ஞ த்ருதீயஸ்து பகவத் கார்ய ஸாதக: ॥

# ॥ श्रीसुन्दरकाण्डः ॥

# ॥ ஸ்ரீ ஸுந்தர காண்ட: ॥

---

नारायणाय परिपूर्णगुणार्णवाय विश्वोदयस्थितिलयोन्नियतिप्रदाय ।
ज्ञानप्रदाय विबुधासुरसौख्यदुःखसत्कारणाय विततांय नमो नमस्ते ॥

நாராயணாய பரிபூர்ண குணார்ணவாய விஸ்வோதயஸ்-
திதிலயோன்னியதி ப்ரதாய ।
க்ஞானப்ரதாய விபுதா ஸுர ஸௌக்ய து:க
ஸத்காரணாய விததாய நமோ நமஸ்தே ॥

ஹே நாராயணா! பரிபூர்ணமான குணக் கடலும், உலகத்தைப் படைத்து, காத்து, அழிப்பவரும், ஞானத்தை அருளுபவரும், தேவர்களுக்கு சுகத்தையும், அஸுரர்களுக்கு துக்கத்தையும் கொடுப்பவரும், உலகெங்கும் வியாபித்திருப்பவருமான உமக்கு என் நமஸ்காரங்கள்.



ॐ रामाय शाश्वतसुविस्तृतषड्गुणाय सर्वेश्वराय बलवीर्यमहार्णवाय ।
नत्वा लिलंघयिषुरर्णवमुत्पपात निष्पीड्य तं गिरिवरं पवनस्य सूनुः ॥ 1 ॥

ஓம் ராமாய ஸாஸ்வதஸுவிஸ்த்ருத ஷட்குணாய
ஸர்வேஸ்வராய பலவீர்ய மஹார்ணவாய ।
நத்வா லிலங்கயிஷுரர்ணவமுத்பபாத நிஷ்பீட்ய
தம் கிரிவரம் பவனஸ்ய ஸூனு: ॥

1. சாசுவதமானதும் மிகவும் விஸ்தாரமானதுமான ஆறு குணங்களையுடையவனும், ஸர்வேச்வரனும், பலம் வீர்யம் இவைகளுக்குப் பெருங்கடல் போன்றவனுமான ராமனை நமஸ்கரித்துவிட்டு ஸமுத்ரத்தைத் தாண்ட விரும்பி அந்த உயர்ந்த மலையை அமுக்கிக்கொண்டு வாயுபுத்ரன் மேலே கிளம்பினார்.

चुक्षोभ वारिधिरनुप्रययौ च शीघ्रं यादोगणैः सह तदीयबलाभिकृष्टः ।
वृक्षाश्च पर्वतगताः पवनेन पूर्वं क्षिप्तोर्णवे गिरिरुदागमदस्य हेतोः ॥ 2 ॥

சுக்ஷோப வாரிதிரனுப்ரயயௌ ச ஸீக்ரம் யாதோகணை:
ஸஹ ததீய பலாபிக்ருஷ்ட: ।
வ்ருக்ஷாஸ்ச பர்வதகதா: பவனேன பூர்வம்
க்ஷிப்தோர்ணவே கிரிருதாகமதஸ்ய ஹேதோ: ॥

2. கடல் கலங்கியது. ஹனுமானின் வேகத்தினால் இழுக்கப்பட்ட ஸமுத்ர ராஜனும் தன்னுடைய ஜல ஜந்துக்களுடன் அவரைப் பின்தொடர்ந்தான். மலை மீது காணப்பட்ட விருக்ஷங்களும் அவ்வாறே செய்தன. முன்பு வாயு பகவானால் கடலில் எறியப்பட்ட மைனாக பர்வதமானது ஹனுமானுக்கு சேவை செய்ய மேலே வந்தது.





शालो हरस्य गिरिपक्षविनाशकाले क्षिप्तोर्णवे स मरुतोर्वरितात्मपक्षः ।
हैमो गिरिः पवनजस्य तु विश्रमार्थमुद्भिद्य
वारिधिमवर्धदनेकसानुः ॥ 3 ॥

ஸாலோ ஹரஸ்ய கிரிபக்ஷ விநாஸகாலே
க்ஷிப்தோர்ணவே ஸ:மருதோர் வரிதாத்ம பக்ஷ: ।
ஹைமோ கிரி: பவனஜஸ்ய து விஸ்ரமார்த்தம்
உத்பித்ய வாரிதிமவர்ததநேக ஸானு: ॥

3. இந்த தங்க மயமான மைநாக பர்வதம் பரம சிவனின் மைத்துனன். முன்பு இந்திரன் பர்வதங்களின் இறக்கைகளை வெட்டியபோது இவன் வாயு பகவானால் ஸமுத்திரத்தில் எறியப்பட்டு இறக்கைகளுடன் காப்பாற்றப்பட்டான். இப்போது இந்தப் பர்வதம் வாயுபுத்ரன் தன் மேல் தங்கி இளைப்பாறுவதற்காக ஸமுத்ரத்தைப் பிளந்துகொண்டு மேலே வந்து அநேக தாழ்வரைகளுடன் காட்சியளித்தது.

नैवात्र विश्रमणमैच्छदविश्रमोसौ निःसीमपौरुषबलस्य कुतःश्रमोस्य ।
आश्लिष्य पर्वतवरं स ददर्श गच्छन् देवैस्तु नागजननीं प्रहितां वरेण ॥ 4 ॥

நைவாத்ர விஸ்ரமணமைச்சத விஸ்ரமோஸெள
நிஸ்ஸீம பௌருஷ பலஸ்ய குத: ஸ்ரமோஸ்ய ।
ஆஸ்லிஷ்ய பர்வதவரம் ஸ ததர்ஸ கச்சன் தேவைஸ்து
நாகஜனனீம் ப்ரஹிதாம் வரேண ॥

4. ஹனுமான் அங்கு இளைப்பாற விரும்பவில்லை. அவருக்கு சிரமமிருந்தாலல்லவோ இளைப்பாறவேண்டும்! எல்லையில்லாத பௌருஷம், பலம் இவைகளையுடைய இவருக்கு சிரமமேது? எனவே பர்வதத்தை ஆலிங்கனம் செய்துவிட்டு மேலே கிளம்பினார். எதிரில் நாக மாதாவைப் பார்த்தார்.

जिज्ञासुभिर्निजबलं तव भक्ष्यमेतु यद्यत्वमिच्छसि तदित्यमरोदितायाः ।
आस्यं प्रविश्य सपदि प्रविनिःसृतोस्माद्देवाननंदयदुत स्वृतमेषु रक्षन् ॥ 5 ॥

ஜிக்ஞாஸுபிர் நிஜபலம் தவ பக்ஷ்யமேது
யத்யத்வமிச்சஸி ததித்யமரோதிதாயா: ।
ஆஸ்யம் ப்ரவிஸ்ய ஸபதி ப்ரவினி:ஸ்ருதோ-ஸ்மாத்தேவானனந்தயதுத ஸ்வ்ருதமேஷு ரக்ஷன் ॥

5. "நீ எதை விரும்பினாலும் அது உன் வாயில் வந்து விழும்" என்று தேவர்கள் அவளுக்கு வரம் கொடுத்து ஹனுமானுடைய பலத்தைப் பரீக்ஷிப்பதற்கு அவளை அங்கு அனுப்பியிருந்தார்கள். அவர் அவள் வாயில் புகுந்து வெளியே வந்தார். தம் பலத்தையும் காண்பித்தார்; தேவர்களுடைய வரத்திற்குப் பங்கம் வராமல் காத்து அவர்களையும் மகிழ்வித்தார்.

दृष्ट्वा सुरप्रणयितां बलमस्य चोग्रं देवाःप्रतुष्टुवुरमुं सुमनोभिवृष्ट्या ।
तैरादृतःपुनरसौ वियतैव गच्छन् छायाग्रहं प्रतिददर्श च सिंहिकाख्यम् ॥ 6 ॥

த்ருஷ்ட்வா ஸுர ப்ரணயிதாம் பலமஸ்ய சோக்ரம் தேவா:
ப்ரதுஷ்டுவுரமும் ஸுமனோபி வ்ருஷ்ட்யா ।
தைராத்ருத: புனரஸௌ வியதைவ கச்சன்
சாயாக்ரஹம் ப்ரதி ததர்ஸ ச ஸிம்ஹிகாக்யம் ॥

6. தங்கள் பேரில் உள்ள அன்பையும், உக்ரமான பலத்தையும் கண்டறிந்த தேவர்கள் பூமாரி பொழிந்து ஹனுமானை ஸ்தோத்திரம் செய்தனர். அவர்களால் ஆதரிக்கப்பட்ட ஹனுமான் மேலும் ஆகாயமார்க்கமாகச் சென்று ஸிம்ஹிகை என்ற ராக்ஷஸியை எதிரில் கண்டார். நிழலைப் பிடித்து இழுத்து அதைச்சார்ந்த பிராணிகளை விழுங்கும் சக்தியுடையவள் அவள்.





लंकावनाय सकलस्य च निग्रहेऽस्याः सामर्थ्यमप्रतिहतं प्रददौ विधाता ।
छायामवाक्षिपदसौ पवनात्मजस्य सोऽस्याःशरीरमनुविश्य
बिभेद चाशु ॥ 7 ॥

லங்காவனய ஸகலஸ்ய ச நிக்ரஹேஸ்யா:
ஸாமர்த்யமப்ரதிஹதம் ப்ரததௌ விதாதா ।
சாயாமவாக்ஷிபதஸௌ பவனத்மஜஸ்ய ஸோஸ்யா:
ஸரீரமனுவிஸ்ய பிபேத சாஸு ॥

7. இலங்கையைக் காக்கவேண்டி யாரையும் வெல்லும் தடையில்லாத சக்தியை அவளுக்கு பிரம்மா கொடுத்திருந்தார் அவள் ஹனுமானின் நிழலைப்பற்றி இழுத்தாள். ஹனுமானே அவள் வயிற்றில் புகுந்து அதைப் பிளந்துகொண்டு வெளியே வந்தார்.

निःसीममात्मबलमित्यनुदर्शयानो हत्वैव तामपि विधातृवराभिगुप्ताम् ।
लंबे स लंबशिखरे निपपात लंकाप्राकाररूपकगिरावथसंचुकोच ॥ 8 ॥

நிஸ்ஸீம மாத்ம பலமித்யனு தர்ஸயானே ஹத்வைவ
தாமபி விதாத்ரு வராபி குப்தாம் ।
லம்பே ஸ லம்பஸிகரே நிபபாத லங்காப்ராகாரரூபக
கிராவத ஸம்சுகோச ॥

8. இப்படி தம் பலம் எல்லையற்றது என்பதைக் காண்பித்தார். பிரம்மாவின் வரத்தினல் காப்பாற்றப் பட்ட அவளையும் கொன்ருர். பிறகு அனேக சிகரங்கள் உள்ளதும் இலங்கைக்குப் பிராகாரம் போன்றதுமான லம்பபர்வதத்தின்மீது இறங்கி சிறிய உருவம் எடுத்துக் கொண்டார்.

भूत्वा बिडालसमितो निशि तां पुरीं च प्राप्स्यन्ददर्श निजरूपवतीं स लंकाम् ।
रुद्धोनयाश्वथ विजित्य च तां स्वमुष्टिपिष्टां तयानुमत एव विवेश लंकाम् ॥ 9 ॥

பூத்வா பிடாலஸமிதோ நிஸி தாம் புரீம் ச ப்ராப்ஸ்யன்
ததர்ஸ நிஜரூபவதீம் ஸ லங்காம் ।

ருத்தோனயாஸ்வத விஜித்ய ச தாம் ஸ்வமுஷ்டி
பிஷ்டாம் தயானுமத ஏவ விவேஸ லங்காம் ॥

9. ஹனுமான் பூனையைப் போல் சிறிய உருவெடுத்து இலங்கைக்குள் பிரவேசிக்க எண்ணினார். அப்போது இலங்கையைக் காக்கும் இலங்கிணி தென்பட்டு அவரைத் தடுத்தாள். உடனே ஹனுமான் அவளைத் தனது முஷ்டியால் நிக்ரஹம் செய்து, அவள் அனுமதியின் பேரில் இலங்கையினுள் பிரவேசித்தார்.

मार्गमाणो बहिश्चांतः सोशोकवनिकातले ।
ददर्श शिंशुपावृक्षमूलस्थितरमाकृतिम् ॥ 10 ॥

மார்கமாணோ பஹிஸ்சாந்த: ஸோ ஸோக வனிகா தலே।
ததர்ஸ ஸிம்ஸுபா வ்ருக்ஷ மூலஸ்தித ரமாக்ருதிம் ॥

10. நகரின் உள்ளேயும் வெளியேயும் தேடிய பிறகு ஹனுமான் அசோக வனத்தில் சிம்சுபா விருக்ஷத்தினடியில் ஸீதையின் உருவத்தைக் கண்டார்.

नरलोकविडंबस्य जानन्रामस्य हृद्गतम् ।
तस्य चेष्टानुसारेण कृत्वा चेष्टाश्च संविदम् ॥ 11 ॥

நரலோக விடம்பஸ்ய ஜானன் ராமஸ்ய
ஹ்ருத்கதம் ।
தஸ்ய சேஷ்டானு ஸாரேண க்ருத்வா
சேஷ்டாஸ்ச ஸம்விதம் ॥





11. மனித வேடத்தில் நடிக்கும் ராமன் உள்ளம் ஹனுமானுக்குத் தெரியும். அதை அனுஸரித்தே ஹனுமானும் நடந்து கொண்டார். பேச்சுவார்த்தைகளையும் நடத்தினர்.

तादृक्चेष्टासमेतायै अंगुलीयमदात्ततः ।
सीताया यानि चैवासन्नाकृतेस्तानि सर्वशः ।
भूषणानि द्विधाभूत्वा तान्येवासंस्तथैव च ॥ 12 ॥

தா த்ருக் சேஷ்டாஸமேதாயை அங்குலீயமதாத்தத:।
ஸீதாயா யானி சைவாஸன்னாக்ருதே ஸ்தானி ஸர்வஸ:।
பூஷணானி த்விதா பூத்வா தான்யே வாஸம்ஸ்ததைவ ச॥

12. அதைப்போன்றே நடித்த ஸீதையிடம் கணையாழியைத் தந்தார். உண்மையான ஸீதைக்கு எந்தெந்த ஆபரணங்கள் இருந்தனவோ அவை அத்தனையும் இரட்டித்து, அவையே இந்த மாயா ஸீதையிடம் அப்படியே காணப்பட்டன.

अथ चूडामणिं दिव्यं दातुं रामाय सा ददौ ॥ 13 ॥

13. அவளும் ராமனிடம் கொடுப்பதற்காக திவ்யமான சூடாமணியைக் கொடுத்தாள்.

यद्यप्येते न पश्यंति निशाचरगणास्तु ते ।
द्युलोकचारिणःसर्वे पश्यंत्यृषय एव च ॥ 14 ॥
तेषां विडंबनायैव दैत्यानां वंचनाय च ।
पश्यतां कलिमुख्यानां विडंबोयं कृतो भवेत् ॥ 15 ॥

யத்யப்யே தே ந பஸ்யந்தி நிஸாசர கணாஸ்துதே ।
த்யுலோக சாரிண: ஸர்வே பஸ்யந்த்யுருஷய ஏவ ச ॥

தேஷாம் விடம்பனையைவ னத்யானாம் வஞ்சனய ச ।
பஸ்யதாம் கலிமுக்யாணாம் விடம்போயம் க்ருதோ பவேத்॥

14, 15. தூங்கிக்கொண்டிருந்ததால் சில அரக்கர் கூட்டங்கள் இந்த நாடகத்தைப் பார்க்கவில்லை என்றாலும் ஆகாயத்தில் ஸஞ்சரிக்கும் தேவர்களும் மஹரிஷிகளும் பார்த்தார்கள். (இவர்களுக்கு உண்மை தெரியும்.) கலி முதலிய அரக்கர்களும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களை வஞ்சிக்கவே இந்த நாடகம்.

कृत्वा कार्यमिदं सर्वं विशंकः पवनात्मजः ।
आत्माविष्करणे चित्तं चक्रे मतिमतां वरः ॥ 16 ॥

க்ருத்வா கார்யமிதம் ஸர்வம் விஸங்க: பவனாத்மஜ: ।
ஆத்மா விஷ்கரணே சித்தம் சக்ரே மதிமதாம் வர: ॥

16. மஹாபுத்திமானான ஹனுமான் நிர்ப்பயமாய் இந்தக் காரியத்தை முடித்துவிட்டு தம்முடைய ஸ்வரூபத்தை வெளிக்காட்ட விரும்பினார்.

अथ वनमखिलं तद्रावणस्यावलुप्य क्षितिरुहमिममेकं वर्जयित्वाशु वीरः ।
रजनिचरविनाशं कांक्षमाणोतिवेलं मुहुरतिरवनादि तोरणं चारुरोह ॥ 17 ॥

அத வனமகிலம் தத்ராவணஸ்யாவலும்ப்ய க்ஷிதிருஹ
மிம மேகம் வர்ஜயித்வாஸு வீர: ।
ரஜனிசர விநாஸம் காம்க்ஷ மாணோதிவேலம்
முஹுரதிரவனாதீ தோரணம் சாருரோஹ ॥





17. பிறகு வீர ஹனுமான், அந்த ஸிம்ஸுபா விருக்ஷத்தை மட்டும் விட்டுவிட்டு மற்ற அசோகவனம் முழுவதையும் அழித்து ராக்ஷஸ ஸம்ஹாரம் செய்ய விரும்பி அடிக்கடி பிரம்மாண்டமாகக் கர்ஜனை செய்துகொண்டு கோட்டை வாயிலில் ஏறி வீற்றிருந்தார்.

अथाश्रृणोद्दशाननः कपींद्रचेष्टितं परम् ।
दिदेश किंकरान्बहून् कपिर्निगृह्यतामिति ॥ 18 ॥

அதாஸ்ருணோத் தஸானன: கபீந்த்ர சேஷ்டிதம் பரம் |
திதேஸ கிங்கரான் பஹூன் கபிர்னிக்ருஹ்யதாமிதி ||

18. ராவணன் கபிச்ரேஷ்டனின் இந்த பராக்ரமச் செயலைக் கேள்வியுற்று அவரைக் கொல்ல கிங்கரர்கள் என்ற அநேக ஏவலாளர்களை அனுப்பினான்.

समस्तशो विमृत्यवो वराद्धरस्य किंकराः ।
समासदन्महाबलं सुरांतरात्मनोंगजम् ॥ 19 ॥

ஸமஸ்தஸோ விம்ருத்யவோ வராத்தரஸ்ய கிங்கரா: |
ஸமா ஸதன் மஹாபலம் ஸுராந்தராத்மனோங்கஜம் ||

19. தேவர்களின் உயிருக்கு உயிராயுள்ள வாயு பகவானின் புத்ரனை மஹாபலம் பொருந்திய ஹனுமானைத் தாக்க, சிவனிடமிருந்து சாகா வரம் பெற்ற எல்லா அரக்கர்களும் ஓடி வந்தார்கள்.

अशीतिकोटियूथपं पुरःसराष्टकायुतम् ।
अनेकहेतिसंकुलं कपींद्रमावृणोद्बलम् ॥ 20 ॥

அஸீதி கோடியூதபம் புரஸ்ஸராஷ்டகாயுதம் |
அனேக ஹேதி ஸங்குலம் கபீந்த்ரமாவ்ருணோத்பலம் ||

20. 80 கோடி வீரர்கள், 80000 ஸேனாபதிகள் அநேக ஆயுதங்கள் கொண்ட ஸேனை கபிச்ரேஷ்டனைச் சூழ்ந்துகொண்டது.

समावृतस्तथायुधैः स ताडितैश्च तैर्भृशम् ।
चकार तान्समस्तशस्तलप्रहारचूर्णितान् ॥ 21 ॥

ஸமா வ்ருதஸ்ததாயுதை: ஸ தாடிதஸ்ச தைர்ப்ருஸம் ।
சகார தான் ஸமஸ்த ஸஸ்தல ப்ரஹார சூர்ணிதான் ॥

21. அவர்களால் சூழப்பட்டவனும் ஆயுதங்களால் பலமாகத் தாக்கப்பட்டவனுமான ஹனுமான் தம் முஷ்டியாலேயே அவர்களனைவரையும் சிதற அடித்துவிட்டார்.

पुनश्च मंत्रिपुत्रकान् स रावणप्रचोदितान् ।
ममर्द सप्तपर्वतप्रभान् वराभिरक्षितान् ॥ 22 ॥

बलाग्रगामिनस्तथा स शर्ववाक्सुगर्वितान् ।
निहत्य सर्वरक्षसां तृतीयभागमक्षिणोत् ॥ 23 ॥

புனஸ்ச மந்த்ரி புத்ரகான் ஸ ராவண ப்ரசோதிதான் ।
மமர்த ஸப்த பர்வதப்ரபான் வராபிரக்ஷிதான் ॥

பலாக்ர காமினஸ்ததா ஸ ஸர்வவாக்ஸுகர்விதான் ।
நிஹத்ய ஸர்வரக்ஷஸாம் த்ருதீயபாகமக்ஷிணோத் ॥

22, 23. பிறகு ராவணன் தன் மந்திரி புத்ரர்கள் ஏழு பேரை ஏவினான். அவர்கள் பர்வதங்களைப் போல் இருந்தனர். அவர்கள் சேனைத் தலைவர்கள். ருத்ரன் அளித்த வரத்தினால் காப்பாற்றப்பட்டும் அதனால் கர்வமடைந்தவர்களுமான அந்த ஸேனாபதிகளை ஹனுமான் உள்ளங்கால்களால் மிதித்துக் கொன்று விட்டார். அரக்க ஸேனா பலத்தில் மூன்றில் ஒரு பங்கை அழித்தார்.





अनौपमं हरेर्बलं निशम्य राक्षसाधिपः ।
कुमारमक्षमात्मनः समं सुतं न्ययोजयत् ॥ 24 ॥

அனௌபமம் ஹரேர்பலம் நிஸம்ய
ராக்ஷஸாதிப: ।
குமாரமக்ஷமாத்மன: ஸமம் ஸுதம் ந்யயோஜயத் ॥

24. பிறகு ராக்ஷஸ ராஜனான ராவணன் குரங்கின் ஒப்பற்ற சக்தியைக் கேட்டு தனக்கு பலத்தில் ஸமமான தன் இரண்டாவது குமாரனை அக்ஷகுமாரனை ஏவினான்.

स सर्वलोकसाक्षिणः सुतं शरैर्ववर्ष ह ।
शितैर्वरास्त्रमंत्रितैर्नचैनमभ्यचालयत् ॥ 25 ॥

ஸ ஸர்வ லோக ஸாக்ஷிண: ஸுதம் ஸரைர்வ வர்ஷ ஹ ।
ஸிதைர் வராஸ்த்ர மந்த்ரிதைர் நசைனப்ய சாலயத் ॥

25. அவனும் ஸர்வலோக சாக்ஷியான வாயுவின் புத்ரனை ஹனுமான் மீது உயர்ந்த மந்திரங்களுடன் பிரயோகிக்கப்பட்ட கூர்மையான அம்புகளைப் பொழிந்து தாக்கினான். எனினும் ஹனுமானை அசைக்கக்கூட முடியவில்லை.

स मंडमध्यकासुतं समीक्ष्य रावणोपमम् ।
तृतीय एष चांशको बलस्य हीत्य चिंतयत् ॥ 26 ॥

ஸ மண்ட மத்ய காஸுதம் ஸமீக்ஷ்ய ராவணோபமம் ।
த்ருதீய ஏஷ சாம்ஸகோ பலஸ்ய ஹீத்ய சிந்தயத் ॥

26. ஹனுமான் மண்டோதரியின் புத்ரனை அக்ஷனை ராவணனுடைய பலத்தில் மூன்றில் ஒரு பங்கு கொண்டவன் என நினைத்தார்.

निधार्य एव रावणः स राघवाय नान्यथा ।
यदींद्रजिन्मया हतो नचास्य शक्तिरीक्ष्यते ॥ 27 ॥

நிதார்ய ஏவ ராவண: ஸ ராகவாய நான்யதா |
யதிந்த்ரஜின்மயா ஹதோ நசாஸ்ய ஸக்திரீக்ஷ்யதே ||

अतस्तयोःसमो मया तृतीय एष हन्यते ।
विचार्य चैवमाशु तं पदोःप्रगृह्य पुप्लुवे ॥ 28 ॥

அதஸ்தயோ: ஸமோ மயா த்ருதீய ஏஷ ஹன்யதே |
விசார்ய சைவ மாஸு தம் பதோ: ப்ரக்ருஹ்ய புப்லுவே ||

स चक्रवद्भ्रमातुरं विधाय रावणात्मजम् ।
अपोथयद्धरातले क्षणेन मारुतीतनुः ॥ 29 ॥

ஸ சக்ரவத்ப்ரமாதுரம் விதாய ராவணாத்மஜம் |
அபோதயத் தராதலே க்ஷணேன மாருதீதனு:||

27, 28, 29. "ராவணனை ராமனே கொல்ல வேண்டும். இந்திரஜித்தை நான் கொன்றாலோ இவன் பராக்ரமத்தைக் காணும் ஸந்தர்ப்பம் மற்றவர்களுக்கு இல்லாமல் போய்விடும். ஆகவே அவர்களுக்குச் சமமான அக்ஷகுமாரனையே நான் கொல்லுவேன்" என்று ஹனுமான் யோசித்து உடனே அவனுடைய இரு கால்களையும் பற்றி உயரே தூக்கிச்சென்று, சக்ரம்போல் சுழற்றி பூமியில் மோதினார்.

विचूर्णिते धरातले निजे सुते स रावणः ।
निशम्य शोकतापितस्तदग्रजं समादिशत् ॥ 30 ॥

விசூர்ணிதே தராதலே நிஜே ஸுதே
ஸ ராவண: |
நிஸம்ய ஸோக தாபிதஸ்த தக்ரஜம்
ஸமாதிஸத் ||





30. அக்ஷன் பூமியில் மோதுண்டு சிதறியதைக் கேட்ட ராவணன் மிகுந்த துக்கத்தால் தபித்தான். பிறகு இந்திரஜித்தை அனுப்பினான்.

अथेंद्रजिन्महाशरैर्वरास्त्रसंप्रयोजितैः ।
ततश्च वानरोत्तमं न चाशकद्विचालने ॥ 31 ॥

அதேந்த்ரஜின்மஹா ஸரைர் வராஸ்த்ர ஸம்ப்ர-
யோஜிதை: ।
ததக்ஷ வானரோத்தமம் ந சாஸகத்வி சாலனே ॥

31. பிறகு இந்திரஜித் வானரஸ்ரேஷ்டரான ஹனுமானை அநேக உத்தம அஸ்திரமந்திரங்களுடன் நன்கு பிரயோகிக்கப்பட்ட பெரிய பாணங்களால் தாக்கியும் அவரை அசைக்கக்கூட முடியவில்லை.

अथास्त्रमुत्तमं विधेर्युयोज सर्वदुःसहम् ।
स तेन ताडितो हरिर्व्यचिंतयन्निराकुलः ॥ 32 ॥

அதாஸ்த்ரமுத்தமம் விதேர்யுயோஜ ஸர்வது: ஸஹம் ।
ஸதேன தாடிதோ ஹரிர்வ்ய சிந்தயன்னிராகுல : ॥

मया वरा विलंघिता ह्यनेकशःस्वयंभुवः ।
स माननीय एव मे ततोत्र मानयाम्यहम् ॥ 33 ।

மயா வரா விலங்கிதா ஹ்யனேகஸ: ஸ்வயம்புவ: ।
ஸ மானனீய ஏவ மே ததோத்ர மானயாம்யஹம் ॥

इमे च कुर्युरत्र किं प्रहृष्टरक्षसां गणाः ।
इतीह लक्ष्यमेव मे स रावणश्च दृश्यते ॥ 34 ॥

இமே ச குர்யுரத்ர கிம் ப்ரஹ்ருஷ்டரக்ஷஸாம் கணா: ।
இதீஹ லக்ஷ்யமேவ மே ஸ ராவணஸ்ச த்ருஸ்யதே ॥

32, 33, 34. பிறகு அவன் ஒருவராலும் தாங்க முடியாத உத்தமமான பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்தான். அதனால் தாக்கப்பட்ட ஹனுமான் கலங்காமல், "இதற்கு முன் நான் பலதடவை பிரம்மாவின் வரங்களை பயனற்றவையாகச் செய்திருக்கிறேன். அவரோ என்னால் பூஜிக்கத் தகுந்தவர். மேலும் இந்த அரக்கர்கள் சந்தோஷத்தில் மூழ்கி என்னதான் செய்கிறார்களென்று பார்க்கவேண்டாமா? ராவணனைச் சந்திக்கவும் சந்தர்ப்பம் கிடைக்கும். எனவே இந்த அஸ்திரத்திற்காவது நானாகவே கட்டுப் படுகிறேன்," என்று யோசித்தார்.

इदं समीक्ष्य बद्धवत्स्थितं कपींद्रमाशु ते ।
बबंधुरन्यपाशकैर्जगाम चास्त्रमस्य तत् ॥ 35 ॥

இதம் ஸமீக்ஷ்ய பத்தவஸ்திதம் கபீந்த்ரமாஸு தே ।
பபந்துரன்ய பாஸகைர் ஜகாம சாஸ்த்ரமஸ்ய தத் ॥

35. எனவே ஹனுமான் கட்டுண்டதுபோல் காட்டிக்கொண்டார். உடனே அரக்கர்கள் வேறு கயிறுகளாலும் அவரைக் கட்டினார்கள். ஆகையால் அஸ்திரம் பயனற்றதாகப் போய்விட்டது.

अथ प्रगृह्य तं कपिं समीपमानयंश्च ते ।
निशाचरेश्वरस्य तं स पृष्टवांश्च रावणः ॥ 36 ॥

அத ப்ரக்ருஹ்ய தம் கபிம் ஸமீபமானயம்ஸ்ச தே ।
நிஸாசரேஸ்வரஸ்ய தம் ஸ ப்ருஷ்டவாம்ஸ்ச ராவண: ॥

कपे कुतोसि कस्य वा किमर्थमीदृशं कृतम् ।
इतीरितःस चावदत्प्रणम्य राममीश्वरम् ॥ 37 ॥

கபே குதோஸி கஸ்ய வா கிமர்த்தமீத்ருஸம் க்ருதம் ।
இதீரித: ஸ சாவதத்ப்ரணம்ய ராமமீஸ்வரம் ॥





36, 37. பிறகு அரக்கர்கள் ஹனுமானைப் பிடித்து ராவணனிடம் கொண்டு சென்றார்கள். ராவணன் "குரங்கே நீ எங்கிருந்து வருகிறாய்? யாரால் அனுப்பப்பட்டாய்? ஏன் இப்படிச் செய்தாய்?" என்று கேட்டான். ஹனுமானும் தன் ஸ்வாமியான ராமனை நமஸ்கரித்துவிட்டு,

अवैहि दूतमागतं दुरंतविक्रमस्य माम् ।
रघूत्तमस्य मारुतिं कुलक्षये तवेश्वरम् ॥ 38 ॥

அவைஹி தூதமாகதம் துரந்தவிக்ரமஸ்ய மாம் ।
ரகூத்தமஸ்ய மாருதிம் குலக்ஷயே தவேஸ்வரம் ॥

38. "நான் எல்லையற்ற பராக்கிரமத்தை உடைய ரகூத்தமனின் தூதன், வாயுபுத்ரன், உன் குலத்தை அழிக்கும் சக்தியுள்ளவன்.

न चेत्प्रदास्यसि त्वरन् रघूत्तमप्रियां तदा ।
सपुत्रमित्रबान्धवो विनाशमाशु यास्यसि ॥ 39 ॥

ந சேத் ப்ரதாஸ்யஸி த்வரன் ரகூத்தமப்ரியாம் ததா ।
ஸபுத்ர மித்ர பாந்தவோ விநாஸமாஸு யாஸ்யஸி ॥

39. உடனே ரகூத்தமனின் ப்ரிய ஸீதையை அவருக்குத் திருப்பியளிக்காவிடில் நீ புத்ர மித்ர பந்துக்களுடன் சீக்கிரமே நாசமடைவாய்.

न रामबाणधारणे क्षमाः सुरेश्वरा अपि ।
विरिंचशर्वपूर्वकाः किमु त्वमल्पसारकः ॥ 40 ॥

ந ராம பாண தாரணே க்ஷமா : ஸுரேஸ்வரா அபி ।
விரிஞ்ச ஸர்வ பூர்வகா : கிமுத்வமல்பஸாரக: ॥

40. ராம பாணத்தைத் தாங்க பிரம்மா ருத்ரன் முதலிய தேவசிரேஷ்டர்களாலும் முடியாது. அல்ப பலமுள்ள நீ எம்மாத்திரம்?

प्रकोपितस्य तस्य कः पुरःस्थितौ क्षमो भवेत् ।
सुरासुरोरगादिके जगत्यचिंत्यकर्मणः ॥ 41 ॥

ப்ரகோபிதஸ்ய க: புர: ஸ்திதௌ க்ஷமோ பவேத் ।
ஸுராஸுரோரகாதிகே ஜகத்ய சிந்த்யகர்மண: ॥

41. நினைக்கவும் முடியாத காரியத்தை ஸாதிக்க வல்ல ராமன் அதிகோபமூட்டப்பட்டால் தேவர்கள், அரக்கர்கள், நாகர்கள் இவர்களில் எவரால்தான் அவர் முன்னே நிற்கமுடியும்?'' என்று சொன்னார்.

इतीरिते वधोद्यतं न्यवारयद्विभीषणः ।
स पुच्छदाहकर्मणि न्ययोजयन्निशाचरान् ॥ 42 ॥

இதீரிதே வதோத்யதம் ந்யவாரயத் விபீஷண: ।
ஸ புச்சதாஹ கர்மணி ந்யயோஜயன் னிஸாசரான் ॥

42. இப்படிச் சொன்னதும் ராவணன் ஹனுமானைக் கொல்ல முயற்சித்தான். விபீஷணன் தடுத்தான். எனவே அவருடைய வாலைக் கொளுத்தும்படி அரக்கர்களுக்கு உத்தரவிட்டான்.

अथास्य वस्त्रसंचयैः पिधाय पुच्छमग्नये ।
ददुर्ददाह नास्यतन्मरुत्सखो हुताशनः ॥ 43 ॥

அதாஸ்ய வஸ்த்ரஸஞ்சயை: பிதாய
புச்சமக்னயே ।
தது ர்ததாஹ நாஸ்யதன் மருத்ஸகோ
ஹுதாஸன: ॥





43. பிறகு அரக்கர்கள் ஹனுமானின் வாலில் நிறைய வஸ்திரங்களைச் சுற்றிக் கொளுத்தினார்கள். ஆனால் அக்னி ஹனுமானின் வாலைக் கொளுத்தவில்லை. ஏனெனில் வாயுவின் தோழனல்லவா அக்னி?

ममर्ष सर्वचेष्टितं स रक्षसां निरामयः ।
बलोद्धतश्च कौतुकात्प्रदग्धुमेव तां पुरीम् ॥ 44 ॥

மமர்ஷ ஸர்வசேஷ்டிதம் ஸ ரக்ஷஸாம் நிராமய: |
பலோத்ததஸ்ச கௌதுகாத் ப்ரதக்துமேவ தாம் புரீம் ||

44. மஹாபலசாலியான ஹனுமானுக்கு ஒரு தீங்கும் ஏற்படவில்லை. அரக்கர்களின் எல்லாச் செயல்களையும் முகமலர்ச்சியுடன் அவர் பொறுத்துக்கொண்டார். இலங்கையைக் கொளுத்தவேண்டுமென்பதே அவர் நோக்கம்.

ददाह चाखिलां पुरीं स्वपुच्छगेन वह्निना ।
कृतिस्तु विश्वकर्मणो प्रदह्यतास्य तेजसा ॥ 45 ॥

ததாஹ சாகிலாம் புரீம் ஸ்வபுச்சகேன வன்ஹினா |
க்ருதிஸ்து விஸ்வகர்மணோ ப்ரதஹ்யதாஸ்ய தேஜஸா ||

45. தம் வாலிலுள்ள நெருப்பால் இலங்கை முழுவதையும் கொளுத்திவிட்டார். இவர் பராக்ரமத்தால் விச்வகர்மாவின் வேலைப்பாடான இலங்கையும் சாம்பலாயிற்று.

सुवर्णरत्नकारितां स राक्षसोत्तमैःसह ।
प्रदह्य सर्वतःपुरीं मुदान्वितो जगर्ज च ॥ 46 ॥

ஸுவர்ண ரத்ன காரிதாம் ஸ ராக்ஷஸோத்தமை: ஸஹ |
ப்ரதஹ்ய ஸர்வத: புரீம் முதான்விதோ ஜகர்ஜச ||

46. பொன் ரத்னம் இவற்றால் கட்டப்பட்ட நகரத்தை பலமிகுந்த அரக்கர்களுடன் எரித்து ஹனுமான் சந்தோஷ ஆரவாரம் செய்தார்.

स रावणं सपुत्रकं तृणोपमं विधाय च ।
तयोःप्रपश्यतोःपुरीं विधाय भस्मसाद्ययौ ॥ 47 ॥

ஸ ராவணம் ஸபுத்ரகம் த்ருணோபமம் விதாய ச |
தயோ: ப்ரபஸ்யதோ: புரீம் விதாய பஸ்மஸாத்யயௌ ||

47. ராவணனையும் இந்திரஜித்தையும் துரும்பாக எண்ணி அவர்கள் முன்னிலையிலேயே இலங்கையைச் சாம்பலாக்கிச் சென்றார்.

विलंघ्य चार्णवं पुनः स्वजातिभिःप्रपूजितः ।
प्रभक्ष्य वानरेशितुर्मधु प्रभुं समेयिवान् ॥ 48 ॥

விலங்க்ய சார்ணவம் புன: ஸ்வஜாதிபி: ப்ரபூஜித: |
ப்ரபக்ஷ்ய வானரே ஸிதுர்மது ப்ரபும் ஸமேயிவான் ||

48. பிறகு ஹனுமான் மறுமுறைக் கடலைத் தாண்டினார். அக்கரையில் தம் இனத்தாரால் நன்கு பூஜிக்கப்பட்டார் பிறகு மதுவனத்தில் தேனுண்டு தம் பிரபுவான ராமனை பக்தியுடன் அடைந்தார்.

रामं सुरेश्वरमगण्यगुणाभिरामं संप्राप्य सर्वकपिवीरवरैःसमेतः ।
चूडामणिं पवनजःपदयोर्निधाय सर्वांगकैःप्रणतिमस्य चकार भक्त्या ॥ 49 ॥

ராமம் ஸுரேஸ்வர மகண்ய குணாபிராமம் ஸம்ப்ராப்ய ஸர்வ கபிவீர வரை: ஸமேத: |
சூடாமணிம் பவனஜ: பதயோர் நிதாய ஸர்வாங்ககை: ப்ரணதிமஸ்ய சகார பக்த்யா ||





49. பிறகு வாயுபுத்ரன் தேவர்களுக்கு அதிபனும் எண்ணற்ற குணங்களால் ரமணீயமானவருமான ஸ்ரீராமனே, எல்லா கபிவரர்களும் புடைசூழ அடைந்து, அவருடைய பாதாரவிந்தங்களில் சூடாமணியைச் சமர்ப்பித்து ஸாஷ்டாங்கமாகவும் பரமபக்தியுடனும் நமஸ்கரித்தார்.

रामोपि नान्यदनुदातुममुष्य योग्यमत्यन्तभक्तिभरितस्य विलक्ष्य किंचित् ।
स्वात्मप्रदानमधिकं पवनात्मजस्य कुर्वन्समाश्लिषदमुं परमाभितुष्टः ॥ 50 ॥

ராமோபி நான்யதனுதாது மமுஷ்ய யோக்யமத்யந்த
பக்தி பரிதஸ்ய விலக்ஷ்ய கிஞ்சித் ।
ஸ்வாத்ம ப்ரதான மதிகம் பவனாத்மஜஸ்ய குர்வன்
ஸமாஸ்லிஷதமும் பரமாபி துஷ்ட: ॥

50. ஸ்ரீராமரும் பரம சந்தோஷமடைந்து மிகுந்த பக்தியுள்ள ஹனுமாருக்கு வேறொன்றும் பரிசாகக் கொடுக்கத் தகுந்ததல்ல, தன்னையே கொடுத்துவிடுவது தான் மேல் என்று எண்ணி ஹனுமாரை ஆலிங்கனம் செய்து கொண்டார்.

इति श्रीमन्महाभारत तात्पर्य निर्णये
श्रीरामचरिते सुन्दरकाण्डकथानिरूपणं नाम सप्तमोऽध्यायः ॥

ஸ்ரீமத் ஆனந்ததீர்த்த பகவத் பாதார்ய இதி விரசிதே ஸ்ரீமன் மஹாபாரத தாத்பர்ய நிர்ணயே ஸ்ரீராம சரிதே ஸுந்தரகாண்ட கதா நிரூபணம் நாம ஸப்தமோத்யாய:॥





ततः स प्रयतो वृद्धो वसिष्ठो ब्राह्मणैः सह ।
रामं रत्नमये पीठे सहसीतं न्यवेशयत् ॥

वसिष्ठो वामदेवश्च जाबालिरथ काश्यपः ।
कात्यायनः सुयज्ञश्च गौतमो विजयस्तथा ॥

अभ्यषिञ्चन्नरव्याघ्रं प्रसन्नेन सुगन्धिना ।
सलिलेन सहस्राक्षं वसवो वासवं यथा ॥

॥ श्रीकृष्णार्पणमस्तु ॥

## ஸ்ரீராம பட்டாபிஷேக ஸ்லோகம்

ததஃ ஸ ப்ரயதோ வ்ருத்தோ வஸிஷ்டோ
ப்ராம்மணைஃ ஸஹ |
ராமம் ரத்னமயே பீடே ஸஹஸீதம் ந்யவேஸயத் ||

வஸிஷ்டோ வாமதேவஸ்ச ஜாபாலி ரத காஸ்யபஃ |
காத்யாயனஃ ஸுயக்ஞஸ்ச கௌதமோ விஜயஸ்ததா ||

அப்யஷிஞ்சன்னரவ்யாக்ரம் ப்ரஸன்னேன ஸுகந்திநா |
ஸலிலேன ஸஹஸ்ராக்ஷம் வஸவோ வாஸவம் யதா ||

|| ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து ||



॥ श्रीः ॥



# ஸ்ரீ த்வாதஸ ஸ்தோத்ரம்

அன்றொரு நாள் உடுபி க்ஷேத்ரத்தின் அருகாமையிலுள்ள கடற்கரையில் ஸ்ரீமத்வாசாரியார் நித்யகர்மானுஷ்டானம் செய்து கொண்டிருந்தார். அவ்வமயம் பாய்மரக் கப்பலொன்று கடும் புயலில் சிக்கித் தத்தளித்துக் கொண்டிருந்ததைக் கண்டார். மனமிரங்கித் தம் மேல்வஸ்திரத்தால் 'வா' என்று கப்பலை அழைத்தார். ஸ்ரீமத்வர் வாயு பகவானின் மூன்றாவது அவதாரம் ஆகையால், வாயு பகவான் கப்பலைத் தமது புத்ரரின் விருப்பத்திற்கிணங்க விடுவித்தார் போலும்! கப்பல் பத்திரமாகக் கரை வந்து சேர்ந்தது. அதன் தலைவன் ஓடோடியும் வந்து ஸ்ரீமத்வரின் காலில் வீழ்ந்து, "ஸ்வாமி! தங்களுடைய அனுக்ரஹத்தால்தான் எங்களுடைய உயிரும் உடைமையும் தப்பின. எனவே தங்களுக்கு எமது நன்றியின் அறிகுறியாக ஏதாவது கொடுக்க விரும்புகிறேன். தயவு கூர்ந்து பெற்றுக் கொள்ளவேண்டும், என்னிடமுள்ள பொருள்களில் எது வேண்டுமோ அதைக் கேளுங்கள். அதைக் கொடுத்து க்ருதார்த்தனாகிறேன்" என்றான். ஸ்ரீமத்வரோ, துறவியான எனக்கு வேண்டுவது ஒன்றுமில்லை என்றார். எதையாவது பெற்றுக்கொள்ளத்தான் வேண்டுமெனக் கப்பல் தலைவன் நிர்ப்பந்திக்கவே, "அப்படியானால் உன் கப்பலிலுள்ள அந்தப் பெரிய கோபி சந்தனக் கட்டியைக் கொடு" என்று கேட்டார் ஸ்ரீமத்வர். கப்பல் தலைவனுக்கோ ஆச்சர்யம் மேலிட்டது. "ஸ்வாமி! உயர்ந்த பொன் கொண்டு வந்திருக்கிறேன். நவரத்னங்கள் இருக்கின்றன. இவற்றைவிட்டு, கப்பலில் பாரத்திற்காக ஏற்றிய இந்த மண் கட்டியை நாடுவது ஏனோ?"

என்று அவன் வினவினான். "அதுவே போதும்; மேலும் அதுதான் வேண்டும்". என ஸ்ரீமத்வர் சொல்லவே, நொடியில் அந்தப் பெரிய கோபிசந்தனக்கட்டியும் ஸ்ரீ மத்வர் முன் கொண்டுவந்து ஸமர்ப்பிக்கப்பட்டது. ஏனையோர் கோபிசந்தனத்தையே கண்டனர். ஸ்ரீமத்வரோ கோபிசந்தனத்தில் கோபிநாதனையே கண்டார். ஆனந்த பரவசமாய் ஸ்தோத்ரம் செய்ய ஆரம்பித்தார். அதன் பலனே இந்த த்வாதஸ ஸ்தோத்ரம். 12 அத்யாயங்களில் கண்ணனைத் துதி செய்திருப்பதால் இதற்குப் இப்பெயர் வந்தது.

உடனே கோபிசந்தனக்கட்டி இரண்டாக பிளந்தது. அதனுள் வலது கையில் மத்தும் இடது கையில் அதற்கேற்ற கயிறும் ஏந்தி நின்ற அழகிய கண்ணன் காட்சி அளித்தான். எல்லோரும் ஆனந்தத்தில் மூழ்கினார்கள்.

த்வாபர யுகத்தில் இதே அர்ச்சாவதார மூர்த்தியை ஸ்ரீருக்மிணிதேவி பூஜித்து வந்தாள். த்வாரகையைக் கடல் கொண்டபோது அந்த க்ருஷ்ண விக்ரஹம் பூமியில் புதையுண்டு கோபிசந்தனத்தால் மூடப்பட, அதைக் கப்பல் தலைவன் அன்று எடுத்துவர, ஸ்ரீமத்வரிடம் வந்து சேர்ந்தது.

இந்நிகழ்ச்சியை ஸ்ரீவாதிராஜஸ்வாமிகள் வர்ணிக்கும் போது, "ஸகல ஸௌபாக்யங்களும் நிறைந்த த்வாரகா புரியையும் கோப கன்னிகைகளின் வழிபாட்டையும் உபேக்ஷை செய்து தன் தர்மபத்னி லக்ஷ்மீதேவியின் பிறந்த வீடான கடலையும் தாண்டி ஸ்ரீமத்வரின் பக்திக்குக் கட்டுப்பட்டு, கண்ணன் இந்த உடுபி க்ஷேத்ரத்திற்கு ஓடிவந்துவிட்டான்; எனவே இந்த க்ஷேத்ரமே த்வாரகையைவிடச் சிறந்தது" என்கிறார்.





द्वारावतीं सकलभाग्यवतीमुपेक्ष्य गोपालबाललनाकरपूजनं च
वार्धिं वधूगृहमतीत्य स मध्वनाथो यत्रास्ति
तद्रजतपीठपुरं गरीयः ॥

எளிய நடையிலும் பல இனிய சந்தங்களிலும் இயற்றப்பட்டுள்ள இந்த த்வாதஸ ஸ்தோத்ரம், ஞான பக்தி வைராக்கியங்களை உண்டுபண்ணி, பரம புருஷார்த்தமான மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையும் தரவல்லது என்று பலச்ருதியில் சொல்லப்பட்டுள்ளது.

बालसंघमपि बोधयद् भृशं दुर्निरूपवचनं च पण्डितैः ।

"குழந்தைகளுக்கும் பொருள் விளங்கும்படி அவ்வளவு எளிய நடை. தத்வம் அறியப் பண்டிதர்களும் தவிக்க வேண்டியதுதான்" என்று ஸ்ரீமத்வரின் வாக்கை வர்ணித்திருக்கிறார் ஸ்ரீநாராயண பண்டிதாசார்யார் என்ற மஹானுபாவர். அது இந்த க்ரந்தத்திற்கு முற்றிலும் பொருந்தும். ஸ்ரீமத்வர் தமது த்வைத மதத்தின் கோட்பாடுகளுள் அதி முக்யமானவற்றை இங்கேயே வெளிப்படுத்தியிருக்கிறார். எனவே இந்த ஸ்தோத்ரத்தை ஆராய்ச்சி முறையிலே பாராயணம் செய்தால் த்வைத வேதாந்தத்தைப் படித்த பலன் ஏற்படுகிறது.

மேலும் இதற்கு ஒருவிசேஷ மந்த்ர சக்தியும் உண்டு: அதாவது விஷத்தைப் போக்கும் சக்தி. அந்த சக்தியைத் தாமே வெளிப்படுத்திக் காட்டினார் ஸ்ரீமத்வர்.

ஒரு ஸமயம் அவர் பாடம் சொல்லிக்கொண்டிருந்தார். ஆனந்த பரவசமாய், பாடம் கேட்டுக்கொண்டிருந்த சிஷ்யர்கள் "தாங்கள் மறைந்த பிறகு இந்த அற்புத அர்த்தங்களை எங்களுக்கு விளக்கவல்லவர் யாரோ?" என அங்கலாய்த்தனர். அதற்கு அவர் தமது ஓலைச்சுவடிகளைச் சுமந்துவந்து பக்கத்தில் படுத்திருந்த பொதிக் காளையைக் காட்டி, "व्याख्यास्यत्येष गोराट्" "இந்த உயர்ந்த வ்ருஷபம் என் நூல்களுக்கு உரை எழுதும்" என்றார். இதைக் கேட்ட சிஷ்யர்கள் தங்களில் ஒருவரையும் குறிப்பிடாமல்

ஐந்தறிவுள்ள ஒரு ஜந்துவைக் குறிப்பிட்டதைக் கேட்டு மனம் நொந்து பொருமை மேலிட்டு, 'सर्पदष्टो म्रियेत' 'ஸர்ப்பம் தீண்டி இறக்கட்டும்' என்று அந்த வ்ருஷபத்தைச் சபித்தனர். வ்ருஷபமும் சுருண்டு விழுந்ததை பார்த்தார் மத்வர். ஸிஷ்யர்களைக் கொண்டு த்வாதச ஸ்தோத்ரத்தை உச்சரிக்கச் செய்தார். உடனே விஷ வேகம் நீங்கித் தூக்கத்திலிருந்து எழுந்ததுபோல் ஸுகமாக எழுந்து நின்றது அக்காளை. பிறகு ஸ்ரீமத்வர் அது ஸாமான்யமான வ்ருஷபமல்லவென்றும் தேவேந்திரன் அம்சமென்றும், இப்போது நன்கு பாடம் கேட்டுப் பிறகு ஜயதீர்த்தர் என்ற முனிவராக அவதாரம் செய்து தமது க்ரந்தங்களுக்கு உயர்ந்த உரைகளைச் செய்து அதன் காரணமாகவே டீகாசார்யார் என்ற பட்டம் பெறப் போகிறது என்றும் சொன்னர்.

இன்றும் மாத்வர்கள் பகவானுக்கு நிவேதனம் செய்யும்போது த்வாதஸ ஸ்தோரத்தை (ஓர் அத்யாயமாவது) ஜபித்து, ப்ரோக்ஷணம் செய்தே நிவேதனம் செய்கின்றனர்.

இந்த ஸ்தோத்ரம் சாபங்களை நீக்கிப் பாபங்களைப் போக்கி அபீஷ்டங்களைத் தந்து பகவத் பக்தியை அதிகரிக்கச் செய்து அழிவற்ற ஸுகத்தை கொடுக்கவல்லது. இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்யும் எவரும் இஹ பர ஸ்ரேயஸ்ஸை அடைவார்கள் என்பதில் ஐயமில்லை; அடையவேண்டுமென்பதே எமது பிரார்த்தனை.

விருபாக்ஷிபுரம்
தர்மபுரி
23—10—1985

இப்படிக்கு,
ஸ்ரீ ராகவேந்த்ர ஸ்வாமி
ஸேவா ஸமிதி





॥ श्रीः ॥



॥ ஸ்ரீ குருப்யோ நம: ॥

# ॥ श्रीद्वादशस्तोत्रम् ॥

# ॥ ஸ்ரீத்வாதஸ ஸ்தோத்ரம் ॥

## முதல் அத்யாயம்

॥ ஹரி: ஓம் ॥

वन्दे वन्द्यं सदानन्दं वासुदेवं निरञ्जनम् ।
इन्दिरापतिमाद्यादिवरदेशवरप्रदम् ॥ (1)

வந்தே வந்த்யம் ஸதாநந்தம் வாஸுதேவம் நிரஞ்சனம் ।
இந்திராபதிமாத்யாதி வரதேச வரப்ரதம் ॥

1. நமஸ்கரிக்கப்பட வேண்டியவரும், எப்போதும் ஆனந்தமாய் இருப்பவரும், தோஷமற்றவரும், லக்ஷ்மீ பதியும், பக்தர்களுக்கு வரமருளும் ப்ரம்ம ருத்ராதிகளுக்கும் வரத்தைக் கொடுப்பவருமான வாஸுதேவனை நமஸ்கரிக்கிறேன்.

नमामि निखिलाधीशकिरीटाघृष्टपीठवत् ।
हृत्तमःशमनेऽर्काभं श्रीपतेः पादपङ्कजम् ॥ (2)

நமாமி நிகிலாதீச கிரீடாக்ருஷ்ட பீடவத் ।
ஹ்ருத்தம: ஸமனேர்க்காபம் ஸ்ரீபதே: பாதபங்கஜம் ॥

2. வணங்குகின்ற எல்லாத் தேவர்களுடைய கிரீடங்களும் உராய்கின்ற பீடத்தை உடையதும், உள்ளத்தின் இருளைப் போக்குவதில் ஸூரியன் போன்றதுமான ஸ்ரீபதியின் பாதத்தாமரையை வணங்குகிறேன்.

जाम्बूनदांबराधारं नितम्बं चिन्त्यमीशितुः ।
स्वर्णमञ्जीरसंवीतमारूढं जगदम्बया ॥ (3)

ஜாம்பூனதாம்பராதாரம் நிதம்பம் சிந்த்யமீஸிது: ।
ஸ்வர்ண மஞ்ஜீர ஸம்வீதம் ஆருடம் ஜகதம்பயா ॥

3. பொன்மயமான பீதாம்பரத்தின் பற்றுக்கோடானதும், தங்க அரைஞாணால் சுற்றப்பட்டிருப்பதும், லோகமாதா அமர்ந்திருப்பதுமான இறைவனின் இடுப்பைத் தியானிக்கவேண்டும்.

उदरं चिन्त्यमीशस्य तनुत्वेऽप्यखिलंभरम् ।
वलित्रयाङ्कितं नित्यमुपगूढं श्रियैकया ॥ (4)

உதரம் சிந்த்யமீசஸ்ய தனுத்வேப்யகிலம் பரம் ।
வலித்ரயாங்கிதம் நித்யம் உபகூடம் ச்ரியைகயா ॥

4. ஈசனின் வயிற்றைத் தியானிக்கவேண்டும் அது சிறியதானாலும் எல்லா உலகங்களையும் தன்னுள்ளே அடக்கியுள்ளது. அதில் மூன்று மடிப்புகள் உள்ளன. எப்போதும் லக்ஷ்மீதேவி ஒருவளே தான் அதை அணைத்துக் கொண்டிருக்கிறாள்.





स्मरणीयमुरो विष्णोरिन्दिरावासमीश्रुतः ।
अनन्तमन्तवदिव भुजयोरन्तरं गतम् ॥ (5)

ஸ்மரணீயமுரோ விஷ்ணோ: இந்திரா
வாஸமீஸிது: |
அனந்தமந்தவதிவ புஜயோரந்தரம் கதம் ||

5. விஷ்ணுவின் மார்பகம் த்யானிக்கத் தக்கது. அது ஸ்ரீதேவியின் வாஸஸ்தலம். எல்லையற்றதானலும், இரண்டு புஜங்களின் நடுவே அடங்கிக் காணப்படுவதால் எல்லைக்குட்பட்டதுபோல காணப்படுகிறது.

शङ्खचक्रगदापद्मधराश्चिन्त्या हरेर्भुजाः ।
पीनवृत्ता जगद्रक्षा केवलोद्योगिनोऽनिशम् ॥ (6)

சங்க சக்ர கதா பத்ம தரா: சிந்த்யா ஹரேர் புஜா: |
பீன வ்ருத்தா ஜகத்ரக்ஷா கேவலோத்யோகினேநிஸம் ||

6. சங்கம், சக்ரம், கதை, பத்மம் இவற்றைத் தாங்குபவைகளும், உருண்டு திரண்டு இருப்பவைகளும் என்றும் உலகத்தைக் காப்பதிலேயே ஈடுபட்டவைகளுமான ஹரியின் புஜங்கள் த்யானிக்கத் தக்கவை.

सन्ततं चिन्तयेत्कण्ठं भास्वत्कौस्तुभभासकम् ।
वैकुण्ठस्याखिला वेदा उद्गीर्यन्तेऽनिशं यतः ॥ (7)

ஸந்ததம் சிந்தயேத் கண்டம் பாஸ்வத் கௌஸ்துப
பாஸகம் |
வைகுண்டஸ்யாகிலா வேதா உத்கீர்யந்தேநிஸம் யத: ||

7. பகவானின் கழுத்தை எப்பொழுதும் த்யானிக்க வேண்டும். ஒளி மிக்க கௌஸ்துபரத்னத்தைப் பிரகாசப் படுத்துவது அது. அதிலிருந்து எல்லா வேதங்களும் எப்போதும் ஒலிக்கின்றன.

स्मरेत यामिनीनाथसहस्रामितकान्तिमत् ।
भवतापापनोदीड्यं श्रीपतेर्मुखपङ्कजम् ॥ (8)

ஸ்மரேத யாமினீ நாத ஸஹஸ்ராமித காந்திமத் ।
பவதாபாபநோதீட்யம் ஸ்ரீபதேர் முக பங்கஜம் ॥

8. ஸ்ரீபதியின் முகமென்னும் தாமரை த்யானத்திற் குரியது. அது பல்லாயிரம் சந்திரனின் ஒளியைவிட அதிகமான காந்தியை உடையது. பிறப்பு, இறப்பு என்னும் பவ (ஸம்ஸார) தாபத்தைப் போக்கவல்லது; எனவே போற்றத்தக்கது.

पूर्णानन्यसुखोद्भासिमन्दस्मितमधीशितुः ।
गोविन्दस्य सदा चिन्त्यं नित्यानन्दपदप्रदम् ॥ (9)

பூர்ணானன்ய ஸுகோத்பாஸி மந்த ஸ்மிதமதீஸிது: ।
கோவிந்தஸ்ய ஸதா சிந்த்யம் நித்யானந்த பதப்ரதம் ॥

9. எக்காலத்திலும் அழிவற்ற ஆனந்தம் உள்ள வைகுண்டத்தை நமக்கு அளிக்கவல்ல கோவிந்தனின் மந்தஹாஸம் த்யானிக்கத் தக்கது. பூர்ணமானதும் வேறு ஒன்றிலும் இல்லாததுமான தனது தனித்த ஸுகத்தை வெளியிட்டுப் பிரகாசிக்கிறது அது.

स्मरामि भवसन्तापहानिदामृतसागरम् ।
पूर्णानन्दस्य रामस्य सानुरागावलोकनम् ॥ (10)

ஸ்மராமி பவ ஸந்தாப ஹானிதாம்ருத ஸாகரம் ।
பூர்ணநந்தஸ்ய ராமஸ்ய ஸானுராகாவலோகனம் ॥

10. பவமெனும் பெரும் தாபத்தைப் போக்குவதும், அமுதக் கடலாய்த் திகழ்வதும், பூர்ணமான ஆனந்தத்தை உடையதுமான அழகிய, ஈசனின் கருணை நிரம்பிய பார்வையை நினைக்கிறேன்.





ध्यायेदजस्रमीशस्य पद्मजादिप्रतीक्षितम् ।
भ्रूभङ्गं पारमेष्ठ्यादिपददायि विमुक्तिदम् ॥ (11)

த்யாயேதஜஸ்ரமீஸஸ்ய பத்மஜாதி ப்ரதீக்ஷிதம் |
ப்ரூபங்கம் பாரமேஷ்ட்யாதி பததாயி விமுக்திதம் ||

11. எப்போதும் ஈசனின் புருவ அசைவைத் த்யானிக்கவேண்டும். லக்ஷ்மீ தேவி முதலியவர்கள் அதை எதிர்நோக்கியிருக்கின்றார்கள். ப்ரம்மபதம் முதலியவை அதனால் கிட்டும். மோக்ஷத்தையும் தரும் சக்தி வாய்ந்ததும் அதுவே.

सन्ततं चिन्तयेऽनन्तमन्तकाले विशेषतः ।
नैवोदापुर्गृणन्तोऽन्तं यद्गुणानामजादयः ॥ * Bh 8/5 (12)

ஸந்ததம் சிந்தயேனந்தம் அந்தகாலே விஸேஷத: |
நைவோதாபுர் க்ருணந்தோந்தம் யத்குணனாம் அஜாதய: ||

12. எப்போதும், முக்கியமாய் மரண காலத்தில், அனந்தனை நினைக்கிறேன். அந்த அனந்தனின் குணங்களைப் புகழ்ந்து பாடுவதில் ஈடுபட்ட ப்ரம்மா முதலானவர்கள் அவற்றின் முடிவைக் காணவேயில்லை.

॥ इति श्रीमदानन्दतीर्थभगवत्पादाचार्यविरचिते श्रीमद्वादशस्तोत्रे प्रथमोऽध्यायः ॥ 1 ॥

## இரண்டாவது அத்யாயம்

सुजनोदधिसंवृद्धिपूर्णचन्द्रो गुणार्णवः ।
अमन्दानन्दसान्द्रो नः प्रीयतामिन्दिरापतिः ॥ (1)

ஸுஜனோததி ஸம்வ்ருத்தி பூர்ண சந்த்ரோ குணார்ணவ: |
அமந்தானந்த ஸாந்த்ரோ ந: ப்ரீயதாமிந்திராபதி: ||

1. ஸாதுக்களென்னும் ஸமுத்திரத்தைப் பொங்கி, பூரிக்கும்படி செய்யும் பூர்ண சந்திரனும், குணக்கடலும், குறைவுபடாத ஆனந்தம் நிரம்பியவருமான லக்ஷ்மீபதி நம்மிடத்தில் ப்ரியம் கொள்வாராக.

* BG 8/5 அந்தகாலே ச மாமேவ ஸ்மரன் முக்த்வா களேவரம்
ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்ஸய:

रमाचकोरीविधवे दुष्टदर्पोदवह्नये ।
सत्पान्थजनगेहाय नमो नारायणाय ते ॥ (2)

ரமா சகோரீ விதவே துஷ்ட தர்போத வன்ஹயே l
ஸத்பாந்த ஜன கேஹாய நமோ நாராயணாய தே ||

2. லக்ஷ்மீதேவி என்னும் சகோரபக்ஷிக்குச் சந்திரனைப் போன்றவரும், துஷ்டர்களின் அஹங்காரமெனும் ஜலத்தை வற்றவைக்கும் தீ போன்றவரும், ஸாதுக்கள் என்னும் வழிப்போக்கர்களுக்குத் தங்குமிடம் போன்றவருமான ஸ்ரீமந்நாராயணா! உமக்கு நமஸ்காரம்.

चिदचिद्भेदमखिलं विधायाधाय भुञ्जते ।
अव्याकृतगृहस्थाय रमाप्रणयिने नमः ॥ (3)

சிதசித் பேதமகிலம் விதாயாதாய புஞ்ஜதே l
அவ்யாக்ருத க்ருஹஸ்தாய ரமா ப்ரணயினே நம: ||

3. சேதனம், அசேதனம் என்ற பேதத்தை உடைய உலகை ஸ்ருஷ்டித்து, காத்து, அழிப்பவரும், லக்ஷ்மீதேவியின் அன்புக் கணவராக அபூர்வமான க்ருஹஸ்தாஸ்ரமத்தை நடத்துபவருமான உமக்கு அஞ்சலி செய்கிறேன்.

अमन्दगुणसारोऽपि मन्दहासेन वीक्षितः ।
नित्यमिन्दिरयानन्दसान्द्रो यो नौमि तं हरिम् ॥ (4)

அமந்த குண ஸாரோபி மந்த ஹாஸேன வீக்ஷித: l
நித்யமிந்திரயானந்த ஸாந்த்ரோ யோ நௌமி தம் ஹரிம் ||

4. ஆனந்தம் முதலான உயர்குணங்களின் ஸாரமாக இருந்தபோதிலும் என்றும் லக்ஷ்மீதேவியினால் மந்த ஹாஸத்துடன் பார்க்கப்பட்டு அதனால் ஆனந்தத்தில் திளைத்திருக்கும் திருமாலே உமக்கு நமஸ்காரம்.





वशी वशे न कस्यापि यो ऽजितो विजिताखिलः ।
सर्वकर्ता न क्रियते तं नमामि रमापतिम् ॥ (5)

வஸீ வஸே ந கஸ்யாபி யோ ஜிதோ விஜிதாகில: |
ஸர்வ கர்த்தா ந க்ரியதே தம் நமாமி ரமாபதிம் ||

5. ஸ்ரீபதி எல்லாவற்றையும் தம் வஸத்தில் வைத்திருப்பவர். ஆனால் அவர் ஒருவர் வஸத்திலும் இல்லை. அவர் ஒருவராலும் ஜயிக்கப்படவில்லை. ஆனால் எல்லாரையும் ஜயித்தவர். எல்லாவற்றையும் ஆக்கியவர் அவரே. அவரை யாரும் ஆக்கவில்லை. அப்படிப்பட்டவருக்கு நமஸ்காரம்.

अगुणाय गुणोद्रेकस्वरूपायादिकारिणे ।
विदारितारिसङ्घाय वासुदेवाय ते नमः ॥ (6)

அகுணாய குணோத்ரேக ஸ்வரூபாயாதிகாரிணே |
விதாரிதாரிஸங்காய வாஸுதேவாய தே நம: ||

6. ப்ராக்ருதமான குணங்களற்றவரும், அப்ராக்ருதமான உயர்குணங்களின் வடிவமாய் இருப்பவரும், முதலில் உலகைப் படைத்தவரும், சத்ருக்களின் கூட்டத்தை முறியடித்தவருமான வாஸுதேவனே! உமக்கு என் அஞ்சலி.

आदिदेवाय देवानां पतये सादितारये ।
अनाद्यज्ञानपाराय नमो वरवराय ते ॥ (7)

ஆதிதேவாய தேவானாம் பதயே ஸாதிதாரயே |
அனாத்யஜ்ஞான பாராய நமோ வரவராயதே ||

7. தேவர்களுக்கு முன்னவரும், தேவர்களின் தலைவரும், சத்ருக்களை வென்றவரும், அனாதியான அஞ்ஞானத்திற்கு அப்பால் இருப்பவரும், உயர்ந்தவர்களுக்கும் உயர்ந்தவருமான உமக்கு நமஸ்காரம்.

अजाय जनयित्रेऽस्य विजिताखिलदानव ।
अजादिपूज्यपादाय नमस्ते गरुडध्वज ॥ (8)

அஜாய ஜனயித்ரேஸ்ய விஜிதாகில தானவ।
ஆஜாதி பூஜ்ய பாதாய நமஸ்தே கருடத்வஜ ||

8. கருடனைக் கொடியில் தாங்கியுள்ள திருமாலே! பிறப்பற்றவரும், ஆனால் பிறரைப் பிறப்பிப்பவரும், எல்லா அரக்கர்களையும் வென்றவரும் பிரம்மா முதலியோரால் பூஜிக்கத் தக்க பாதாரவிந்தத்தையுடையவருமான உமக்கு நமஸ்காரம்.

इन्दिरामन्दसान्द्राग्र्यकटाक्षप्रेक्षितात्मने ।
अस्मदिष्टैककार्याय पूर्णाय हरये नमः ॥ (9)

இந்திராமந்த ஸாந்த்ராக்ரய கடாக்ஷ ப்ரேக்ஷிதாத்மனே।
அஸ்மதிஷ்டைக கார்யாய பூர்ணய ஹரயே நம: ||

9. லக்ஷ்மீதேவியின் ஆனந்தம் பொங்கும் கடைக்கண்ணால் பார்க்கப்பட்டவரும், எங்களுடைய இஷ்டமொன்றையே பூர்த்தி செய்பவரும், முழுமுதற்கடவுளுமான ஹரியே! உமக்கு நமஸ்காரம்.

॥ इति श्रीमदानन्दतीर्थभगवत्पादाचार्यविरचिते द्वादशस्तोत्रे द्वितीयोऽध्यायः ॥ 2 ॥

## மூன்றும் அத்யாயம்

कुरु भुंक्ष्व च कर्म निजं नियतं हरिपादविनम्रधिया सततम् ।
हरिरेव परो हरिरेव गुरुर्हरिरेव जगत्पितृमातृगतिः ॥ (1)

குரு புங்க்ஷ்வ ச கர்ம நிஜம் நியதம் ஹரிபாத வினம்ர
தியா ஸததம்।
ஹரிரேவ பரோ ஹரிரேவ குருர் ஹரிரேவ ஜகத்
பித்ரு மாத்ரு கதி: ||



நியதம் குரு கர்ம த்வம், கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண:
ஸரீர யாத்ராபி ச தே, ந ப்ரஸித்யேத் அகர்மண:



3/8 [நமக்கு உபதேசம் செய்கிருர்]

1. ஹரியின் சரணரவிந்தங்களில் குவிந்த மனதுடன் உன்னுடைய கடமையைச் செய். தவிர்க்கமுடியாத பூர்வ ஜன்ம கர்மாவின் பலனை அனுபவி. ஹரியே உயர்ந்தவர். ஹரியே குரு. ஹரியே உலகிற்கு மாதா, பிதா, புகலிடம்.

न ततोऽस्त्यपरं जगतीड्यतमं परमात्परतः पुरुषोत्तमतः ।
तदलं बहुलोकविचिन्तनया प्रवणं कुरु मानसमीशपदे ॥ (2)

ந ததோஸ்த்யபரம் ஜகதீட்ய தமம்
பரமாத் பரத: புருஷோத்தமத: ।
ததலம் பஹு லோக விசிந்தனயா
ப்ரவணம் குரு மானஸமீஸ பதே ॥

2. புருஷோத்தமனை பரமனைக்காட்டிலும் வேறு எதுவும் உலகில் போற்றத்தக்கதில்லை. ஆகையால் எல்லா உலகக் கவலைகளையும் விட்டொழி. மனதை ஈசனின் சரணரவிந்தங்களில் செலுத்து.

यततोऽपि हरेः पदसंस्मरणे सकलं ह्यघमाशु लयं व्रजति ।
स्मरतस्तु विमुक्तिपदं परमं स्फुटमेष्यति तत्किमपाक्रियते ॥ (3)

யததோபி ஹரே: பத ஸம்ஸ்மரணே
ஸகலம் ஹ்யகமாசு லயம்வ்ரஜதி ।
ஸ்மரதஸ்து விமுக்தி பதம் பரமம்
ஸ்புடமேஷ்யதி தத்கிமபாக்ரியதே ॥

3. ஹரியின் பாதத்தை நினைக்க முயற்சி செய்யும் போதே எல்லாப் பாபமும் உடனே அழிந்துவிடுகிறது. நினைத்தாலோ உயர்ந்ததான மோக்ஷம் நம்மை நிச்சயமாகத் தேடிவரும். அப்படியிருக்க அவர் சரணாரவிந்தங்களை உபேக்ஷை செய்வது ஏனோ!

श्रुणुतामलसत्यवचः परमं शपथेरितमुच्छ्रितबाहुयुगम् ।
न हरेः परमो न हरेः सदृशः परमः स तु सर्वचिदात्मगणात् ॥ (4)

ச்ருணுதாமல ஸத்ய வச : பரமம்
சபதேரிதமுச்ரித பாஹு யுகம் ।
ந ஹரே பரமோ ந ஹரே: ஸத்ருஸ:
பரம: ஸ து ஸர்வசிதாத்மகணாத் ॥

4. எல்லாச் சேதன வஸ்துக்களிலும் அவரே மிகவும் உயர்ந்தவர். இரண்டு கைகளையும் உயரத் தூக்கிச் சப்தம் செய்து தூய, உயர்ந்த உண்மையைச் சொல்கிறேன்; கேளுங்கள்; ஹரியைவிட உயர்ந்தவரோ அல்லது ஹரிக்கு ஸமமானவரோ ஒருவரும் இல்லை.

यदि नाम परो न भवेत्स हरिः कथमस्य वशे जगदेतदभूत् ।
यदि नाम न तस्य वशे सकलं कथमेव तु नित्यसुखं न भवेत् ॥ (5)

யதி நாம பரோ ந பவேத் ஸ ஹரி:
கதமஸ்ய வஸே ஜகதேததபூத் ।
யதி நாம ந தஸ்ய வஸே ஸகலம்
கதமேவ து நித்யஸுகம் ந பவேத் ॥

5. ஹரி எல்லோரையும்விட உயர்ந்தவராக இல்லாவிட்டால் இவ்வுலகம் அவர் வசத்தில் எப்படி இருக்க முடியும்? இவ்வுலகம் அவர் வசத்தில் இல்லையென்றால் ஏன் ஒவ்வொருவரும் மோக்ஷத்தை அடையக்கூடாது?

न च कर्मविमामलकालगुणप्रभृतीशमचित्तनु तद्धि यतः ।
चिदचित्तनुसर्वमसौ तु हरिर्यमयेदिति वैदिकमस्ति वचः ॥ (6)

ந ச கர்ம விமா மல கால குண ப்ரப்ருதீஸ
மசித்தனு தத்தி யத: ।
சிதசித் தனு ஸர்வமஸௌ து ஹரி:
யமயேதிதி வைதிகமஸ்தி வச: ॥





6. சேதனுசேதன உலகனைத்தையும் ஹரி அடக்கி ஆள்பவர் என்பது வேதவாக்கு. பூர்வகர்மா, அவித்யை ராகாதி தோஷங்கள், காலம், குணுத்மகமான ப்ரதானம் இவையே மனிதனை ஆட்டி வைக்கின்றன என்று சிலர் கூறுகின்றனர். அது பிசகு. அவை ஜடமாதலால் அவற்றிற்குச் சுதந்திரமாய்க் காரியத்தைச் செய்யும் ஆற்றல் ஏது?

व्यवहारमिदापि गुरोर्जगतां न तु चित्तागता स हि चोद्यपरम् ।
बहवः पुरुषाः पुरुषप्रवरो हरिरित्यवदत्स्वयमेव हरिः ॥ (7)

வ்யவஹார பிதாபி குரோர் ஜகதாம் ந து
சித்தகதா ஸ ஹி சோத்ய பரம் |
பஹவ: புருஷா: புருஷ ப்ரவரோ
ஹரிரித்யவதத் ஸ்வயமேவ ஹரி ||

7 வ்யவஹார தசையில் மட்டும்தான் ஜீவாத்மா, பரமாத்மா இவர்களுக்குள் பேதம் உண்டு என்பது வேத வ்யாஸருடைய அபிப்பிராயமல்ல. ஏனெனில் ஜனமேஜய மஹாராஜாவின் கேள்விக்குப் பதிலளிக்கையில். புருஷர்கள் (ஜீவாத்மாக்கள்) அனேகம். ஆனல் "புருஷோத்தமன் ஒருவனே" என்று ஹரியின் அவதாரமான வேத வ்யாஸ பகவானே சொல்லியிருக்கிறுர்.

चतुराननपूर्वविमुक्तगणा हरिमेत्य तु पूर्ववदेव सदा ।
नियतोच्चविनीचतयैव निजांस्थितिमापुरिति स्म परं वचनम् ॥ (8)

சதுரானன பூர்வ விமுக்த கணு
ஹரிமேத்ய து பூர்வ வதேவ ஸதா |
நியதோச்ச வினீசதயைவ நிஜாம்
ஸ்திதிமாபுரிதி ஸ்ம பரம் வசனம் ||

8. ப்ரம்மா முதலான முக்தர்கள் ஹரியை அடைந்து எப்பொழுதும் போலவே தங்களுக்கென்று ஏற்பட்ட உயர்ந்த அல்லது தாழ்ந்த பதவியை அடைந்தனர் என்பது வேத வாக்கு.

आनन्दतीर्थसन्नाम्ना पूर्णप्रज्ञाभिधायुजा ।
कृतं हर्यष्टकं भक्त्या पठतः प्रीयते हरिः ॥ (9)

ஆனந்த தீர்த்த ஸன்னம்னு பூர்ண ப்ரஜ்ஞாபிதா யுஜா ।
க்ருதம் ஹர்யஷ்டகம் பக்த்யா படத: ப்ரீயதே ஹரி: ॥

9. பூர்ணப்ரஜ்ஞர் என்ற பெயருடைய ஆனந்த தீர்த்தர் என்ற புனிதரால் ஹரியைப் புகழும் எட்டு ச்லோகங்கள் பக்தியுடன் இயற்றப்பட்டன. இவற்றைப் பக்தியுடன் பாராயணம் செய்தால் ஹரி அவர்பால் அருளுடையவராவர்.

॥ इति श्रीमदानन्दतीर्थभगवत्पादाचार्यविरचिते द्वादशस्तोत्रे
तृतीयोऽध्यायः ॥ 3 ॥

## நான்காம் அத்யாயம்

निजपूर्णसुखामितबोधतनुः परशक्तिरनन्तगुणः परमः ।
अजरामरणः सकलार्तिहरः कमलापतिरीड्यतमोऽवतु नः ॥ (1)

நிஜ பூர்ண ஸுகாமித போத தனு:
பர சக்திரனந்த குண: பரம: ।

அஜரா மரண: ஸகலார்த்தி ஹர:
கமலாபதி ரீட்ய தமோ வது ந: ॥

1. பரிபூர்ணமான ஸுகம், எல்லை இல்லா ஞானம் இவற்றின் ஸ்வரூபமாக உள்ளவரும், மிகுந்த சக்தியை உடையவரும் முடிவற்ற குணங்களை உடையவரும், பரமனும், மூப்பு, மரணம் அற்றவரும், ஸகல துக்கங்களையும் போக்கடிப்பவரும், நமஸ்கரிக்கத் தக்கவருள் தலைசிறந்தவருமான லக்ஷ்மீபதி நம்மைக் காப்பாராக.





यदसुप्तिगतोऽपि हरिः सुखवान्
सुखरूपिणमाहुरतो निगमाः ।
स्वमतिप्रभवं जगदस्य यतः
परबोधतनुं च ततः स्वपतिम् ॥ (2)

யதஸுப்தி கதோபி ஹரி: ஸுகவான்
ஸுகரூபிண மாஹுரதோ நிகமா: ।
ஸ்வமதி ப்ரபவம் ஜகதஸ்ய யத:
பரபோத தனும் ச தத: ஸ்வபதிம் ।

2. எப்பொழுதும் விழித்துக்கொண்டிருந்தாலும் ஹரி ஸுகமாகவே இருக்கிறார். ஆகையால்தான் வேதங்கள் அவரை ஸுகஸ்வரூபி என்று சொல்கின்றன. மேலும் இவ்வுலகமானது அவருடைய புத்தி சக்தியாலேயே ஸ்ருஷ்டிக்கப்பட்டுள்ளது. எனவே அவரை மஹாஞான ஸ்வரூபி என்றும் தமக்குத் தாமே எஜமானர் என்றும் வேதங்கள் சொல்கின்றன.

बहुचित्रजगद्बहुधाकरणात्परशक्तिरनन्तगुणः परमः ।
सुखरूपममुष्य पदं परमं स्मरतस्तु भविष्यति तत्सततम् ॥ (3)

பஹு சித்ர ஜகத் பஹுதா கரணாத்
பரஸக்திரனந்த குண: பரம: ।
ஸுகரூபமமுஷ்ய பதம் பரமம்
ஸ்மரதஸ்து பவிஷ்யதி தத் ஸததம் ॥

3. பலவிதமானதும் விசித்ரமானதுமான அநேக உலகங்களை ச்ருஷ்டி செய்திருப்பதனாலேயே பரமன் மிகவும் உயர்ந்த சக்தி வாய்ந்தவர்; எல்லையில்லா நற்குணம் படைத்தவர் என்று தெரியவில்லையா? ஸுகமே நிறைந்த இவருடைய பரமபதம் எப்போதும் அதை நினைப்போருக்குக் கிடைக்கும்.

स्मरणे हि परेशितुरस्य विभोर्मलिनानि मनांसि कुतः करणम् ।
विमलं हि पदं परमं स्वरतं तरुणार्कसवर्णमजस्य हरेः ॥ (4)

ஸ்மரணே ஹி பரேஶிதுரஸ்ய விபோ:
மலினானி மனாம்ஸி குத: கரணம் |
விமலம் ஹி பதம் பரமம் ஸ்வரதம்
தருணார்க்க ஸவர்ண மஜஸ்ய ஹரே: ||

4. எங்கும் நிறைந்த பரம்பொருளாகிய இவருடைய ஸ்மரணையினால் மாசற்ற மனமும் பரிசுத்தமாகும். பிறப்பற்ற ஹரியின் பிறருடைய அபேக்ஷையின்றி ஆனந்தமடைவதும் இளம் சூரியனைப் போன்றதுமான பரமபதம் பரிசுத்தமான தன்றோ!

विमलैः श्रुतिशाणनिशाततमैः सुमनोऽसिभिराशु निहत्य दृढम् ।
बलिनं निजवैरिणमात्मतमोभिदमीशमनन्तमुपास्व हरिम् ॥ (5)

விமலை: ச்ருதி ஸாண நிஸாத தமை:
ஸுமனோ ஸிபி ராஸு நிஹத்ய த்ருடம் |
பலினம் நிஜவைரிண மாத்ம தமோ
பித மீஸ மனந்த முபாஸ்வ ஹரிம் ||

5. வேதம் என்னும் சாணையினால் கூர்மையாகத் தீட்டப்பட்டுப் பளபளவென்று மின்னுகின்ற நல்மனம் என்னும் வாளால், மிகவும் பலம் பொருந்திய உன் சத்ருவாகிய அஞ்ஞானத்தை வெட்டி வீழ்த்து. ஆத்ம இருளை அகற்றுகின்ற ஈசனை, அனந்தனை ஹரியை, உபாஸிப்பாயாக.

स हि विश्वसृजो विभुशम्भुपुरन्दरसूर्यमुखानपरानमरान् ।
सृजतीड्यतमोऽवति हन्ति निजं पदमापयति प्रणतान्सुधिया ॥ (6)

ஸ ஹி விஸ்வ ஸ்ருஜோ விபு ஸம்பு
புரந்தர ஸூர்ய முகானபரானமரான் |
ஸ்ருஜதீட்யதமோவதி ஹந்தி நிஜம்
பதமாபயதி ப்ரணதான் ஸுதியா ||





6. அவர்தாம், உலகத்தை ஸ்ருஷ்டிக்கும் ப்ரம்மா, ருத்ரன், இந்திரன், சூரியன் முதலிய தேவர்களை ஸ்ருஷ்டிக்கிறார், காப்பாற்றுகிறார்; ஸம்ஹாரம் செய்கிறார். நன்மதியால் தம்மை வணங்குபவருக்குத் தம்முடைய பரமபதத்தையும் அருளுகின்றார்.

परमोऽपि रमेशितुरस्य समो न हि कश्चिदभून्न भविष्यति च ।
क्वचिदद्यतनोऽपि न पूर्णसदागणितेड्यगुणानुभवैकतनोः ॥ (7)

பரமோபி ரமேஸிதுரஸ்ய ஸமோ
ந ஹி கஸ்ச்சிதபூத் ந பவிஷ்யதி ச ।
க்வசிதத்யதனோபி ந பூர்ண ஸதா
கணிதேட்ய குணானுபவைக தனோ: ॥

7. பரிபூர்ணமானவையும் என்றும் எண்ணவும் முடியாதவையுமான உயர் குணங்களால் நிறைந்த லக்ஷ்மீபதிக்கு ஸமானமாக மிகவும் உயர்ந்த யாரும் எங்கும் இதற்கு முன்னும் இல்லை, இனியும் இருக்கப் போவதில்லை; எப்போதும் இல்லை.

इति देववरस्य हरेः स्तवनं कृतवान् मुनिरुत्तममादरतः ।
सुखतीर्थपदाभिहितः पठतस्तदिदं भवति ध्रुवमुच्चसुखम् ॥ (8)

இதி தேவ வரஸ்ய ஹரே: ஸ்தவனம்
க்ருதவான் முனிருத்தமமாதரத: ।
ஸுகதீர்த்த பதாபிஹித: படத:
ததிதம் பவதி த்ருவமுச்ச ஸுகம் ॥

8. இப்படி ஸுகதீர்த்தர் என்ற பெயருடைய முனிவர் பரம பக்தியுடன் தேவச்ரேஷ்டரான ஹரியின் உத்தமமான ஸ்தோத்ரத்தை இயற்றியிருக்கிறார். இதை ஆதரவுடன் பாராயணம் செய்பவருக்கு ஸாஸ்வதமான உயர்ந்த ஸுகம் (மோக்ஷம்) கிடைக்கும்.

॥ इति श्रीमदानन्दतीर्थभगवत्पादाचार्यविरचिते द्वादशस्तोत्रे
चतुर्थोऽध्यायः ॥ 4 ॥

## ஐந்தாம் அத்யாயம்

वासुदेवापरिमेयसुधामन् शुद्धसदोदितसुन्दरिकान्त ।
धराधरधारणवेधुरधर्तः सौधृतिदीधितिवेधृविधातः ॥ (1)

வாஸுதேவாபரிமேய ஸுதாமன்
ஸுத்த ஸதோதித ஸுந்தரி காந்த।
தராதர தாரண வேதுரதர்த்த:
ஸௌத்ருதி தீதிதி வேத்ரு விதாத:॥

1. ஹே! வாஸுதேவ! அறிவுக்கெட்டாத உயர் சக்தியை உடையவரே! பரம பரிசுத்தரே! என்றும் பூர்ணமாக இருப்பவரே! ஸ்ரீகாந்தனே! கோவர்த்தனோத்தாரரே! மந்தரோத்தாரரே! ஸகல ஜகத்தையும் தரிப்பவரே! அஸுர ஸம்ஹாரகரே! விசேஷமான ஆனந்தம், ஞானம், வீர்யம் படைத்த ப்ரம்மாவையும் படைத்தவரே!

अधिकबन्धं रन्धय बोधाच्छिन्धि पिधानं बन्धुरमद्धा ।
केशव केशव शासक वन्दे पाशधरार्चित शूरवरेश ॥ (2)

அதிக பந்தம் ரந்தய போதாச்
சிந்தி பிதானம் பந்துரமத்தா।
கேஸவ கேஸவ ஸாஸக வந்தே
பாஸ தரார்ச்சித ஸுரவரேஸ॥

2. அறிவை மறைத்து உலக பந்தத்தை அளிக்கும் அஞ்ஞானத்தை, ஞானத்தை அளித்துப் போக்குவீராக. கேசவ! கேசவ! துஷ்டநிக்ரஹம் செய்பவரே! வருணனால் பூஜிக்கப்பட்டவரே! வீரஸ்ரேஷ்டர்களான ப்ரம்மாதிகளுக்கும் தலைவரே! வணக்கம்.





नारायणामलकारण वन्दे कारणकारण पूर्ण वरेण्य ।
माधव माधव साधक वन्दे बाधक बोधक शुद्धसमाधे ॥ (3)

நாராயணாமல காரண வந்தே
காரண காரண பூர்ண வரேண்ய ।
மாதவ மாதவ ஸாதக வந்தே
பாதக போதக ஸுத்த ஸமாதே ॥

3. ஹே! நாராயணா! மாறுதலற்ற காரண ரூபமுள்ளவரே! காரணத்திற்கும் காரணரே! ஞானம், ஆனந்தம் முதலிய குணங்கள் நிறைந்த ஸர்வோத்தமரே! மது குலத்தில் அவதரித்தவரே! மாதவ! சிஷ்டர்களின் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்து வைப்பவரே! துஷ்டர்களுக்குப் பாதகத்தை உண்டுபண்ணுபவரே! கபிலாதி அவதாரங்களில் தத்வங்களை உபதேசித்தவரே! உலகத்திற்கு வழிகாட்டுவதற்கு வ்யாஸாதி ரூபங்களில் ஸமாதி யோகத்தை அனுஷ்டிப்பவரே! வணக்கம்.

गोविन्द गोविन्द पुरन्दर वन्दे स्कन्दसुनन्दनवन्दितपाद ।
विष्णो सृजिष्णो ग्रसिष्णो विवन्दे कृष्ण सदुष्णवधिष्णो सुधृष्णो ॥ (4)

கோவிந்த கோவிந்த புரந்தர வந்தே
ஸ்கந்த ஸுனந்தன வந்தித பாத ।
விஷ்ணோ ஸ்ருஜிஷ்ணோ க்ரஸிஷ்ணோ விவந்தே
கிருஷ்ண ஸதுஷ்ண வதிஷ்ணோ ஸுத்ருஷ்ணோ ॥

4 வேதங்களால் அறியப்படுபவரே! கோவிந்த! லிங்க தேஹத்தைப் பங்கப்படுத்துபவரே! ஸ்கந்தர், ஸுனந்தனர் இவர்களால் வணங்கப்பட்டவரே! விஷ்ணுவே! ஸ்ருஷ்டிப்பவரே! ஸம்ஹாரம் செய்பவரே! கிருஷ்ணா! ஸிஷ்டர்களை ஹிம்ஸிக்கும் துஷ்டர்களை வதம் செய்பவரே!

मधुसूदन दानवमाधन वन्दे दैवतमोदित वेदितपाद ।
त्रिविक्रम विक्रम निष्क्रम वन्दे सुक्रम संक्रमहुंकृतवक्त्र ॥ (5)

மதுஸூதன தானவ ஸாதன வந்தே
தைவத மோதித வேதித பாத ।
த்ரிவிக்ரம விக்ரம நிஷ்க்ரம வந்தே
ஸுக்ரம ஸங்க்ரம ஹுங்க்ருத வக்த்ர ॥

5. மது முதலான அரக்கர்களை ஒழித்தவரே! தேவர்களால் பக்தி மூலம் சந்தோஷப்படுத்தப்பட்டவரே! ஸாதுக்களுக்குத் தன் சரணாரவிந்தங்களில் தர்சனம் அளிப்பவரே! த்ரிவிக்ரமனே! தனக்கென்றே தனி நியதி உள்ளவரே! உலக நடைமுறையையும் அனுசரித்து நடப்பவரே! ப்ரளய காலத்தில் 'ஹூம்' என்ற நாதத்துடன் உலகத்தைத் தரிப்பவனே! ஹிரண்யாக்ஷனுடன் மல்யுத்தம் செய்தவரே!

वामन वामन भामन वन्दे शामन सीमन सामन सानो ।
श्रीधर श्रीधर शन्धर वन्दे भूधर वार्धर कन्धरधारिन् ॥ (6)

வாமன வாமன பாமன வந்தே
ஸாமன ஸீமன ஸாமன ஸானோ ।
ஸ்ரீதர ஸ்ரீதர ஸந்தர வந்தே
பூதர வார்த்தர கந்தர தாரின் ॥

6. ஸாதுக்களுக்கு மங்களத்தையும் அஸாதுக்களுக்கு அமங்களத்தையும் கொடுக்கும் வாமனரே! ஞானத்தைக் கொடுப்பவரே! ஸர்வ அந்தர்யாமியாய் ஸகல ஆத்மாக்களுக்கும் நியாமகனாய் இருப்பவரே! தர்மத்தைக் காப்பவரே! பக்தர்களுக்கு அருள் புரிபவரே! எல்லாவற்றிற்கும் ஆதாரமானவரே! ஹே ஸ்ரீதர! ஸுகத்தைக் கொடுப்பவரே! பூமியைத் தாங்கியவரே! ப்ரகிருதி என்னும் பிரளய ஜலத்திற்கும் ஆதாரமானவரே! நித்யானந்தம் படைத்த முக்தர்களுக்கும் ஆச்ரயமானவரே!





हृषीकेश सुकेश परेश विवन्दे शरणेश बलेश कलेश सुखेश ।
पद्मनाभ शुभोद्भव वन्दे सम्भृतलोकभराभर भूरे ॥ (7)

ஹ்ருஷீகேஸ ஸுகேஸ பரேஸ விவந்தே
ஸரணேச பலேஸ கலேஸ ஸுகேஸ ।
பத்மநாப சுபோத்பவ வந்தே
ஸம்ப்ருத லோக பராபர பூரே ॥

7. இந்திரியங்களுக்கு நியாமகரே! அழகிய கூந்தலை உடையவரே! ப்ரம்மாதிகளுக்கு ஈசரே! பரமரக்ஷகரே! அறுபத்திநான்கு கலைகளுக்கும் ஆசார்யரே! மஹா பராக்ரமம் பொருந்தியவரே! நித்ய ஸுகத்தைக் கொடுப்பவரே! உலகெனும் தாமரையை தொப்புளில் தாங்குபவரே! மங்களத்தைக் கொடுப்பவரே! ப்ரம்மன் முதலான உலகைத் தரிப்பவரே! எல்லாவிதத்திலும் போஷிப்பவரே! பரிபூர்ணரே!

दामोदर दूरतरान्तर वन्दे दारितपारगपार परस्मात् । (8)

தாமோதர தூரதராந்தர வந்தே
தாரித பாரக பார பரஸ்மாத் ।

8. யசோதையால் இடுப்பில் கட்டுண்டவரே! துஷ்ட தூரரே! முக்தர்களின் ஆச்ரயரே!

आनन्दतीर्थमुनीन्द्रकृता हरिगीतिरियं परमादरतः ।
परलोकविलोकनसूर्यनिभा हरिभक्तिविवर्धनशौण्डतमा ॥ (9)

ஆனந்த தீர்த்த முனீந்த்ர க்ருதா
ஹரி கீதிரியம் பரமாதரத: ।
பரலோக விலோகன ஸூர்ய நிபா
ஹரி பக்தி விவர்த்தன ஸௌண்டதமா ॥

9. ஆனந்த தீர்த்த முனிச்ரேஷ்டரால் இந்த ஹரி குண கண கானம் செய்யப்பட்டது. பக்தியுடன் இதைப் பாராயணம் செய்பவர்களுக்கு இது பரலோகத்தை விளக்கவல்ல சூரியனைப் போன்றது ஹரி பக்தியை விசேஷமாய் வளர்க்கவல்லது.

## ஆருவது அத்யாயம்

मत्स्यकरूप लयोदविहारिन् वेदविनेतृचतुर्मुखवन्द्य ।
कूर्मस्वरूपक मन्दरधारिन् लोकविधारक देववरेण्य ॥ (1)

மத்ஸ்யகரூப லயோத விஹாரின்
வேத வினேத்ரு சதுர்முக வந்த்ய ।
கூர்ம ஸ்வரூபக மந்தர தாரின்
லோக விதாரக தேவ வரேண்ய ॥

1. மத்ஸ்யரூபனே! ப்ரளய காலத்தில் விளையாடுபவரே! வேதங்களை இயற்றிய சதுர்முக ப்ரம்மனால் நமஸ்கரிக்கத் தக்கவரே! ஆமையுருவெடுத்தவரே! மந்தர பர்வதத்தைத் தாங்கியவரே! உலகைத் தாங்குபவரே! தேவச்ரேஷ்டரே!

सूकररूपक दानवशत्रो भूमिविदारक यज्ञवराङ्ग ।
देव नृसिंह हिरण्यकशत्रो सर्वभयान्तक दैवतबन्धो ॥ (2)

ஸூகர ரூபக தானவ ஸத்ரோ
பூமி விதாரக யஜ்ஞவராங்க ।
தேவ ந்ருஸிம்ஹ ஹிரண்யக ஸத்ரோ
ஸர்வ பயாந்தக தைவத பந்தோ ॥

2. வராஹ ரூபனே! அரக்கர்களின் சத்ருவே! பூமியை மீட்டவரே! யஜ்ஞஸ்வரூபியே! தேவனே! நரஸிம்ஹனே! ஹிரண்யகனின் சத்ருவே! ஸகல பயங்களையும் போக்கடிப்பவரே! தேவதைகளின் பந்துவே!





वामन वामनमाणववेष दैत्यवरान्तक कारणरूप ।
राम भृगूद्वह सूर्जितदीप्ते क्षत्रकुलान्तक शम्भुवरेण्य ॥ (3)

வாமன வாமன மானவ வேஷ
தைத்ய வராந்தக காரண ரூப |
ராம ப்ருகூத்வஹ ஸூர்ஜித தீப்தே
க்ஷத்ர குலாந்தக ஸம்பு வரேண்ய ||

3. வாமனனே! சிறு மாணவன் வேஷத்தைத் தரித்தவரே! அரக்கர் தலைவனை அழித்தவரே! கார்யத்திற்கேற்ற உரு எடுப்பவரே!

ராமனே! ப்ருகு குலத்தில் உதித்தவரே! மிகவும் அதிகமான பராக்ரமத்தை உடையவரே! க்ஷத்திரிய குலத்தை அழித்தவரே! மங்களத்தைக் கொடுப்பவருள் சிறந்தவரே!

राघव राघव राक्षसशत्रो मारुतिवल्लभ जानकिकान्त ।
देवकिनन्दन सुन्दररूप रुक्मिणिवल्लभ पाण्डवबन्धो ॥ (4)

ராகவ ராகவ ராக்ஷஸ ஸத்ரோ
மாருதி வல்லப ஜானகி காந்த |
தேவகி நந்தன சுந்தர ரூப
ருக்மிணி வல்லப பாண்டவ பந்தோ ||

4. ராகவனே! ரகு குலத்தில் உதித்தவரே! ராக்ஷஸர்களின் சத்ருவே! மாருதிக்கு ப்ரியமானவரே! ஜானகியின் நாயகனே! தேவகி மைந்தனே! அழகிய உருவத்தை உடையவரே! ருக்மிணியின் ப்ரிய பதியே! பாண்டவர்களின் பந்துவே!

देवकिनन्दन नन्दकुमार बृन्दावनाञ्जन गोकुलचन्द्र ।
कन्दफलाशन सुन्दररूप नन्दितगोकुल वन्दितपाद ॥ (5)

தேவகி நந்தன நந்த குமார
ப்ருந்தாவனாஞ்சன கோகுல சந்த்ர |
கந்த பலாஸன ஸுந்தர ரூப
நந்தித கோகுல வந்தித பாத ||

5. தேவகி மைந்தனே! நந்தகுமாரனே! ப்ருந்தா வனத்தின் அழகிற்கு அழகு செய்தவரே! கோகுலத்தின் சந்த்ரன் போன்று பிரகாசித்தவரே! கிழங்கு, பழங்கள் இவற்றையும் தின்றவரே! அழகிய வடிவமுடையவரே! கோகுலத்தை ஆனந்தத்தில் ஆழ்த்தியவரே! வணங்கத் தகுந்த சரணாரவிந்தங்களை உடையவரே!

इन्द्रसुतावक नन्दकहस्त चन्दनचर्चित सुन्दरिनाथ ।
इन्दीवरोदरदळनयन मन्दरधारिन् गोविन्द वन्दे ॥ (6)

இந்த்ர ஸுதாவக நந்தக ஹஸ்த
சந்தன சர்ச்சித சுந்தரி நாத |
இந்தீவரோதர தள நயன மந்த்ர
தாரின் கோவிந்த வந்தே ||

6. இந்திரன் புத்ரனைக் காப்பாற்றியவரே! "நந்தகம்" எனும் உடைவாளைக் கையில் உடையவரே! சந்தனம் பூசிக்கொண்டிருப்பவரே! திருவின் உருவான ஸ்ரீதேவியின் நாயகனே! நீலத்தாமரையின் நடுவில் உள்ள இதழ் போன்ற கண்களைப் படைத்தவரே; மந்தர மலையைத் தரித்தவரே! கோவிந்தனே உமக்கு நமஸ்காரம்.

चन्द्रशतानन कुन्दसुहास नन्दितदैवतानन्दसुपूर्ण ।
दैत्यविमोहक नित्यसुखादे देव सुबोधक बुद्धस्वरूप ॥ (7)

சந்த்ர ஸதானன குந்த ஸுஹாஸ நந்தித
தைவதானந்த ஸுபூர்ண |
தைத்ய விமோஹக நித்ய ஸுகாதே
தேவ ஸுபோதக புத்த ஸ்வரூப ||





7. பல்லாயிரம் சந்த்ரர்களின் காந்தி பொருந்திய முகமுள்ளவரே! அல்லிப் பூப் போன்ற அழகான புன்முறுவல் வாய்ந்தவரே! தேவர்களுக்கு மகிழ்ச்சி அளிப்பவரே! மகிழ்ச்சியால் முற்றும் நிறைந்தவரே! அரக்கர்களின் புத்தியைப் பேதிப்பவரே! சாஸ்வத ஸுகத்தைக் கொடுப்பவரே! தேவனே! மெய்ஞ்ஞானத்தைக் கொடுப்பவரே! புத்தாவதாரம் எடுத்தவரே!

दुष्टकुलान्तक कल्किस्वरूप धर्मविवर्धन मूलयुगादे ।
नारायणामल कारणमूर्ते पूर्णगुणार्णव नित्यसुबोध ॥ (8)

துஷ்ட குலாந்தக கல்கி ஸ்வரூப
தர்ம விவர்த்தன மூலயுகாதே।
நாராயணமல காரண மூர்த்தே
பூர்ண குணார்ணவ நித்ய ஸுபோத॥

8. துஷ்டர் குலத்தை ஒழிப்பவரே! கல்கி அவதாரம் எடுப்பவரே! தர்மத்தை வளர்ப்பவரே! க்ருத யுகத்தைத் துவக்குபவரே! நாராயணா! சுத்தமான ஸ்வரூபமுடையவரே! தகுந்த காரணத்துடன் அவதரிப்பவரே! பூர்ண குண ஸமுத்திரமே! நிலைத்த ஞானமுள்ளவரே! உமக்கு எனது அஞ்சலி.

आनन्दतीर्थमुनीन्द्रकृता हरिगाथा पापहरा शुभा नित्यसुखार्था ॥ (9)

ஆனந்த தீர்த்த முனீந்த்ர கிருதா ஹரிகாதா
பாபஹரா ஸுபா நித்ய ஸுகார்த்தா।

9. ஆனந்த தீர்த்தர் எனும் முனிச்ரேஷ்டரால் ஹரியின் புகழ் இவ்விதம் பாடப்பட்டது. இது மங்களகரமானது; பாபத்தைப் போக்கவல்லது. சாஸ்வத ஸுகத்தைத் தரவல்லது.

BS 1-1-2

## ஏழாம் அத்யாயம்

विश्वस्थितिप्रलयसर्गमहाविभूतिवृत्तिप्रकाशनियमावृतिबन्धमोक्षाः ।
यस्या अपाङ्गलवमात्रत ऊर्जिता सा श्रीर्यत्कटाक्षबलवत्यजितं नमामि ॥ (1)

விஸ்வ ஸ்திதி ப்ரளய ஸர்க்க மஹா விபூதி
வ்ருத்தி ப்ரகாஸ நியமாவ்ருதி பந்த மோக்ஷா: ।
யஸ்யா அபாங்க லவ மாத்ரத ஊர்ஜிதா ஸா
ஸ்ரீர்யத்கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ॥

1. உலகங்களின் படைப்பு, காப்பு, அழிப்பு, அணிமாதி அஷ்ட ஐஸ்வரியம், ஞானம், அஞ்ஞானம், நியமம், பந்தம், விடுதலை எல்லாம் எந்த லக்ஷ்மீ தேவியின் கடைக்கண்ணின் லேசத்தால் நடைபெறுகின்றனவோ அந்த லக்ஷ்மீ தேவியால் பரமாத்மாவின் கடைக்கண்ணின் மகிமையால்தான் இவ்வளவையும் செய்ய முடிகிறது. ஆகவே அந்தத் தோல்வியறியாத மூர்த்திக்கு வணக்கம்

ब्रह्मेशशक्ररविधर्मशशाङ्कपूर्वगीर्वाणसन्ततिरियं यदपाङ्गलेशम् ।
आश्रित्य विश्वविजयं विसृजत्यचिन्त्या श्रीर्यत्कटाक्षबलवत्यजितं नमामि ॥ (2)

ப்ரம்மேஸ ஸக்ர ரவி தர்ம ஸஸாங்க பூர்வ
கீர்வாண ஸந்ததிரியம் யதபாங்க லேஸம் ।
ஆச்ரித்ய விஸ்வ விஜயம் விஸ்ருஜத்யசிந்த்யா
ஸ்ரீர்யத்கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ॥

2. ப்ரம்மா, ருத்ரன், இந்த்ரன், ஸூர்யன், யம தர்மன், சந்த்ரன் முதலிய ஸகல தேவதைகளும் எந்தப் பரமனின் கடைக்கண்ணின் பலத்தால் உலகத்தை ஆளுகின்றனரோ, நினைத்துப்பார்க்க இயலாத வல்லமையுள்ள லக்ஷ்மீதேவி யாருடைய கடாக்ஷத்தால் ஸகல வல்லமை பெற்று விளங்குகிறாளோ அந்த ஸ்ரீமந் நாராயணனுக்கு வணக்கம்.





धर्मार्थकामसुमतिप्रचयाद्यशेषसन्मङ्गलं विदधते यदपाङ्गलेशम् ।
आश्रित्य तत्प्रणतसत्प्रणता अपीड्याः श्रीर्यत्कटाक्षबलवत्यजितं नमामि । (3)

தர்மார்த்த காம ஸுமதி ப்ரசயாத்யசேஷ
ஸன்மங்களம் விதததே யதபாங்க லேஸம் ।
ஆஸ்ரித்ய தத் ப்ரணத ஸத் ப்ரணதா அபீட்யா:
ஸ்ரீர்யத்கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ॥

3. அறம், பொருள், இன்பம், நன்மதி முதலிய ஸகல மங்களங்களையும் அவரது கடாக்ஷமே அருள வல்லது. தர்மாதிகளில் ஈடுபட்டுள்ள ஸாது ஜனங்களால் நமஸ்கரிக்கப்பட்ட இந்த்ராதி தேவர்களும் அவருடைய கடாக்ஷ பலத்தாலேயே பக்தர்களுக்கு மங்களம் உண்டாக்குகின்றனர்.

நினைத்துப் பார்க்க இயலாத வல்லமையுள்ள லக்ஷ்மீ தேவி யாருடைய கடாக்ஷத்தால் ஸகல வல்லமை பெற்று விளங்குகிறாளோ அந்த ஸ்ரீமந் நாராயணனுக்கு வணக்கம்.

षड्वर्गनिग्रहनिरस्तसमस्तदोषा ध्यायन्ति विष्णुमृषयो यदपाङ्गलेशम् ।
आश्रित्य यानपि समेत्य न याति दुःखं श्रीर्यत्कटाक्षबलवत्यजितं नमामि ।। (4)

ஷட் வர்க நிக்ரஹ நிரஸ்த ஸமஸ்த தோஷா
த்யாயந்தி விஷ்ணும்ருஷயோ யதபாங்க லேஸம் ।
ஆஸ்ரித்ய யானபி ஸமேத்ய ந யாதி துஹ்கம்
ஸ்ரீர்யத்கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ॥

4. காமம், க்ரோதம் முதலிய ஆறு சத்ருக்களை வென்று தோஷமற்றவர்களாய் விளங்கும் முனிவர்கள் விஷ்ணுவையே த்யானிக்கின்றனர். அந்த ரிஷிகளை ஆச்ரயித்தாலே மனிதர்கள் துக்கமடைவதில்லை. அப்படி

யிருக்க ரிஷிகள் ஆச்ரயிக்கும் தேவதேவனை ஆச்ரயித்தால் கேட்கவேண்டுமா?

நினைத்துப் பார்க்க இயலாத வல்லமையுள்ள லக்ஷ்மீ தேவி யாருடைய கடாக்ஷத்தால் ஸகல வல்லமை பெற்று விளங்குகிறுளோ அந்த ஸ்ரீமந் நாராயணனுக்கு வணக்கம்.

शेषाहिवैरिशिवशक्रमनुप्रधानचित्रोरुकर्मरचनं यदपाङ्गलेशम् ।
आश्रित्य विश्वमखिलं विदधाति धाता श्रीर्यत्कटाक्षबलवत्यजितं नमामि ॥ (5)

ஸேஷாஹிவைரி சிவ ஸக்ர மனு ப்ரதான
சித்ரோரு கர்ம ரசனம் யதபாங்க லேஸம் |
ஆஸ்ரித்ய விஸ்வமகிலம் விததாதி தாதா
ஸ்ரீர்யத்கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ||

5. ப்ரம்மதேவன் அவருடைய கடாக்ஷ பலத்தாலேயே சேஷன், கருடன் ருத்ரன், மனு முதலானவர்களைப் படைப்பது என்கிற ஆச்சரியமான பெரிய காரியத்தைச் செய்கிறுர்.

நினைத்துப் பார்க்க இயலாத வல்லமையுள்ள லக்ஷ்மீ தேவி யாருடைய கடாக்ஷத்தால் ஸகல வல்லமை பெற்று விளங்குகிறுளோ அந்த ஸ்ரீமந் நாராயணனுக்கு வணக்கம்.

शक्रोग्रदीधितिहिमाकरसूर्यसूनुपूर्वं निहत्य निखिलं यदपाङ्गलेशम् ।
आश्रित्य नृत्यति शिवः प्रकटोरुशक्तिः श्रीर्यत्कटाक्षबलवत्यजितं नमामि ॥ (6)

சக்ரோக்ர தீதிதி ஹிமாகர ஸூர்ய ஸூனு
பூர்வம் நிஹத்ய நிகிலம் யதபாங்க லேஸம் |
ஆஸ்ரித்ய ந்ருத்யதி சிவ: ப்ரகடோரு சக்தி :
ஸ்ரீர்யத்கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ||





6. ருத்ரன் ப்ரளய காலத்தில் அவருடைய கடாக்ஷ பலத்தாலேயே பயங்கரமான சக்தியை வெளிப்படுத்தி, இந்த்ரன், ஸூர்யன், சந்த்ரன், சனி முதலிய ஸகலரையும் அழித்து விட்டு ஊழி நடனம் புரிகிறார்.

நினைத்துப் பார்க்க இயலாத வல்லமையுள்ள லக்ஷ்மீ தேவி யாருடைய கடாக்ஷத்தால் ஸகல வல்லமை பெற்று விளங்குகிறாளோ அந்த ஸ்ரீமந் நாராயணனுக்கு வணக்கம்.

तत्पादपङ्कजमहासनतामवाप शर्वादिवन्द्यचरणो यदपाङ्गलेशम् ।
आश्रित्य नागपतिरन्यसुरैर्दुरापां श्रीर्यत्कटाक्षबलवत्यजितं नमामि ॥ (7)

தத்பாத பங்கஜ மஹாஸனதாமவாப
ஸர்வாதி வந்த்ய சரணோ யதபாங்க லேஸம் ।
ஆஸ்ரித்ய நாகபதிரன்யஸுரைர் துராபாம்
ஸ்ரீர் யத்கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ॥

7. ஆதிசேஷன் அவருடைய கடாக்ஷத்தாலேயே அவருடைய சரணாரவிந்தங்களைத் தாங்கும் உயர்ந்த ஆஸனமானான். இது வேறு தேவர்களுக்குக் கிடைக்க முடியாத பாக்யம். எனவே இந்திரன் முதலானோர் அவனை வணங்குகின்றனர்

நினைத்துப் பார்க்க இயலாத வல்லமையுள்ள லக்ஷ்மீ தேவி யாருடைய கடாக்ஷத்தால் ஸகல வல்லமை பெற்று விளங்குகிறாளோ அந்த ஸ்ரீமந் நாராயணனுக்கு வணக்கம்.

नागारिरुग्रबलपौरुष आप विष्णोर्वाहत्वमुत्तमजवो यदपाङ्गलेशम् ।
आश्रित्य शक्रमुखदेव गणैरचिन्त्यं श्रीर्यत्कटाक्षबलवत्यजितं नमामि ॥ (8)

நாகாரி ருக்ர பல பௌருஷ ஆப விஷ்ணோர்
வாஹத்வமுத்தம ஜவோ யதபாங்க லேஸம் ।
ஆஸ்ரித்ய ஸக்ர முக தேவ கணைரசிந்த்யம்
ஸ்ரீர்யத்கடாக்ஷ பலவத்யஜிதம் நமாமி ॥

8. மிகவும் அதிகமான பலம், பராக்ரமம், வேகம் இவற்றையுடைய கருடன் அவருடைய கடாக்ஷத்தினாலேயே அவருடைய வாஹனமானான். இது இந்த்ரன் முதலிய தேவர்கள் எண்ணிக்கூடப் பார்க்கமுடியாத பாக்யம்.

நினைத்துப் பார்க்க இயலாத வல்லமையுள்ள லக்ஷ்மீ தேவி யாருடைய கடாக்ஷத்தால் ஸகல வல்லமை பெற்று விளங்குகிறாளோ அந்த ஸ்ரீமந் நாராயணனுக்கு வணக்கம்.

आनन्दतीर्थमुनिसन्मुखपङ्कजोत्थं साक्षाद्रमाहरिमनःप्रियमुत्तमार्थम् ।
भक्त्या पठत्यजितमात्मनि सन्निधाय यः स्तोत्रमेतदभियाति तयोरभीष्टम् ॥ (9)

ஆனந்த தீர்த்த முனி ஸன்முக பங்கஜோத்தம்
ஸாக்ஷாத் ரமா ஹரி மன: ப்ரியமுத்தமார்த்தம் ।
பக்த்யா படத்யஜிதமாத்மனி ஸன்னிதாய
ய: ஸ்தோத்ரமேததபியாதி தயோரபீஷ்டம் ॥

9. ஆனந்த தீர்த்த முனிவரின் நன்முகமாகிய தாமரையிலிருந்து பிறந்த இந்த அர்த்தபுஷ்டியுள்ள ஸ்தோத்ரமானது ஸாக்ஷாத் லக்ஷ்மீ, நாராயணன் இவர்களின் மனத்தைக் குளிரவைக்கவல்லது. எவர் இந்த ஸ்தோத்ரத்தை அஜித ஸ்வரூபியான பகவானை மனதில் நிலை நிறுத்திப் பாராயணம் செய்கிறார்களோ அவர்கள் மனதில் நினைத்தது உடனே கைகூடும்.





# எட்டாவது அத்யாயம்

वन्दिताशेषवन्द्योरुवृन्दारकं चन्दनाचर्चितोदारपीनांसकम् ।
इन्दिराचञ्चलापाङ्गनीराजितं मन्दरोद्धारिवृत्तोद्भुजाभोगिनम् ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (1)

வந்திதாஸேஷ வந்த்யோரு வ்ருந்தாரகம்
சந்தன சர்ச்சிதோதார பீனம்ஸகம் |
இந்திரா சஞ்சலாபாங்க நீராஜிதம்
மந்தரோத்தாரி வ்ருத்தோத்புஜாபோகினம் |
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ||

1. எல்லோரும் வணங்கும் தேவர்களாலும் வணங்கப் பட்டவரும், ஹரிசந்தனம் பூசிய அகன்ற பருத்த தோள் களையுடையவரும், லக்ஷ்மீ தேவியின் மருண்ட கடைக் கண்ணால் தீப ஆரத்தி செய்யப்பட்டவரும், மந்தர பர்வ தத்தைத் தூக்கிய திரண்ட ஸர்ப்பம் போன்ற தோள்களை உடையவரும், தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

सृष्टिसंहारलीलाविलासाततं पुष्टषाड्गुण्यसद्विग्रहोल्लासिनम् ।
दुष्टनिश्शेषसंहारकर्मोद्यतं हृष्टपुष्टानुशिष्टप्रजासंश्रयम् ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (2)

ஸ்ருஷ்டி ஸம்ஹார லீலா விலாஸாததம்
புஷ்ட ஷாட்குண்யஸத் விக்ரஹோல்லாஸினம் |
துஷ்ட நிஸ்ஸேஷ ஸம்ஹார கர்மோத்யதம்
ஹ்ருஷ்ட புஷ்டானுஸிஷ்ட பிரஜா ஸம்ஸ்ரயம் |
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ||



BS 1.1-2

2. படைத்தல், அழித்தல் என்ற விளையாட்டில் திளைத்திருப்பவரும், நிறைந்த ஆறு குணங்களாலான திவ்ய மங்கள தேகத்தோடு பிரகாசிப்பவரும் துஷ்டர்களைப் பூண்டோடு ஒழிப்பது எனும் காரியத்தில் ஈடுபட்டிருப்பவரும், சந்தோஷ மிகுதியால் பூரித்துள்ள ஸாதுக்களின் அடைக்கலமும்,

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

उन्नतप्रार्थिताशेषसंसाधकं सन्नतालौकिकानन्ददश्रीपदम् ।
भिन्नकर्माशयप्राणिसंप्रेरकं तन्न किं नेति विद्वत्सु मीमांसितम् ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (3)

உன்னத ப்ரார்த்திதாஸேஷ ஸம்ஸாதகம்
ஸன்னதாலௌகிகானந்தத ஸ்ரீபதம் |
பின்ன கர்மாஸய ப்ராணி ஸம்ப்ரேரகம்
தன்ன கிம் நேதி வித்வத்ஸு மீமாம்ஸிதம் |
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ||

3. உயர்ந்தோரின் ஸகல ப்ரார்த்தனைகளையும் நிறைவேற்றுபவரும், வணங்குபவருக்குத் திவ்யமான ஆனந்தத்தைக் கொடுக்கும் அஷ்டைஸ்வர்யம் நிறைந்த ஸ்தானத்தைக் கொடுப்பவரும் பல்வேறுவிதமான கர்மா, குணம் இவற்றிற்கேற்ப ஒவ்வொருவரையும் தூண்டுபவரும். "அந்த பரமாத்மா ஏன் இல்லை? நிச்சயமாக இருக்கிறார்" என்று விவாதிக்கும் வித்வான்களின் ஆராய்ச்சிப் பொருளான பரம்பொருளும்,

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.





विप्रमुख्यैः सदा वेदवादोन्मुखैः सुप्रतापैः क्षितीशेश्वरैश्चार्चितम् ।
अप्रतर्क्योरुसंविद्गुणं निर्मलं सप्रकाशाजरानन्दरूपं परम् ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (4)

விப்ர முக்யை: ஸதா வேத வாதோன்முகை:
ஸுப்ரதாபை: க்ஷிதீஸேஸ்வரை: சார்சிதம் ।
அப்ரதர்க்யோரு ஸம்வித் குணம் நிர்மலம்
ஸப்ரகாஸாஜரானந்த ரூபம் பரம் ।
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ॥

4. வேதியர்களாலும், எப்போதும் வேதத்தில் சர்ச்சை செய்பவர்களாலும், மஹா பராக்ரமசாலிகளான சக்ரவர்த்திகளாலும் பூஜிக்கப்பட்டவரும், ஊஹிக்க முடியாத உயர்ந்த ஞானத்தை உடையவரும். தோஷமற்றவரும். ஒளி மிக்கதும், என்றும் யெளவனமானதும், ஆனந்த மயமானதுமான ஸ்வரூபமுடையவரும், ஸர்வச்ரேஷ்டரும்,

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

अत्ययो यस्य केनापि न क्वापि हि प्रत्ययो यद्गुणेषूत्तमानां परः ।
सत्यसङ्कल्प एको वरेण्यो वशी मत्यनूनैः सदा वेदवादोदितः ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (5)

அத்யயோ யஸ்ய கேனபி ந க்வாபி ஹி
ப்ரத்யயோ யத்குணேஷுத்தமானும் பர: ।
ஸத்ய ஸங்கல்ப ஏகோ வரேண்யோ வஸீ
மத்யனூனை: ஸதா வேத வாதோதித: ।
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ॥

5. அவருக்கு எங்கும் யாராலும் அழிவில்லை. உயர்ந்தோருக்கு அவரது குணங்களில் அசையாத நம்பிக்கை உண்டு. எண்ணியது எண்ணியபடி நடத்திக் காட்டுபவர் இவர் ஒருவரேதாம். இவரே மிகவும் உயர்ந்தவர். ஸகலத்தையும் தன் வசத்தில் வைத்திருப்பவர். ஓயாது வேதத்தை ஆராய்ந்து அறிஞர்களால் வெளியிடப்பட்டவர் இவரே.

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

पश्यतां दुःखसन्ताननिर्मूलनं दृश्यतां दृश्यतामित्यजेशार्चितम् ।
नश्यतां दूरगं सर्वदाप्यात्मगं वश्यतां स्वेच्छया सज्जनेष्वागतम् ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (6)

பஸ்யதாம் துஹ்க ஸந்தான நிர்மூலனம்
த்ருஸ்யதாம் த்ருஸ்யதாமித்யஜேஸார்ச்சிதம் ।
நஸ்யதாம் தூரகம் ஸர்வதாப்யாத்மகம்
வஸ்யதாம் ஸ்வேச்சயா ஸஜ்ஜனேஷ்வாகதம் ।
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ॥

6 தர்சனம் செய்கின்றவர்களின் துக்கத் தொடரையே வேரறுப்பவரும், "தர்சனம் செய்யுங்கள், தர்சனம் செய்யுங்கள்" என்று கூறி ப்ரம்மா, ருத்ரன் முதலியவர்களால் பூஜிக்கப்படுபவரும், சாஸ்வதமானவரும் என்றும் ஸ்வதந்த்ரரும், தாமாகவே ஸாதுக்களுக்கு வசப்பட்டிருப்பவரும்,

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.





अग्रजं यः ससर्जाजमग्र्याकृतिं विग्रहो यस्य सर्वे गुणा एव हि ।
उग्र आद्योऽपि यस्यात्मजाग्र्यात्मजः सद्गृहीतः
सदा यः परं दैवतम् ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (7)

அக்ரஜம் ய: ஸஸர்ஜாஜமக்ர்யாகிருதிம்
விக்ரஹோ யஸ்ய ஸர்வே குணு ஏவ ஹி ।
உக்ர ஆத்யோபி யஸ்யாத்மஜாக்ர்யாத்மஜ:
ஸத் க்ருஹீத: ஸதா ய: பரம் தைவதம் ।
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ॥

7. உயர்ந்த ஸ்வரூபத்தையுடைய ப்ரம்மன் முதலிய வரை யார் சிருஷ்டித்தாரோ, யார் எல்லா குணங்களின் உருவமானவரோ, முதற்கடவுளாகிய ருத்ரனும், எவருடைய புத்ரனின் முதற் புத்திரனே, ஸாதுக்களால் வேண்டப்படும் உயர் தெய்வம் எதுவோ, அந்த நாராயணனைப் போற்றுவோம்.

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

अच्युतो यो गुणैर्नित्यमेवाखिलैः प्रच्युतोऽशेषदोषैः सदापूर्तितः ।
उच्यते सर्ववेदोरुवादैरजः स्वर्चितो ब्रह्मरुद्रेन्द्रपूर्वैः सदा ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (8)

அச்யுதோ யோ குணைர் நித்ய மேவாகிலை:
ப்ரச்யுதோ ஸேஷதோஷை: ஸதா பூர்த்தித: ।
உச்யதே ஸர்வ வேதோரு வாதை ரஜ:
ஸ்வர்ச்சிதோ ப்ரம்ம ருத்ரேந்த்ர பூர்வைஸ் ஸதா ।
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ॥

8. என்றும் எல்லாக் குணங்களிலும் உள்ளவர்; தோஷங்களற்றவர்; வேத ஆராய்ச்சிகளால் பிறப்பற்றவர் என்று சொல்லப்படுபவர். ப்ரம்மா, ருத்ரன், இந்த்ரன் இவர்களால் எப்போதும் நன்கு பூஜிக்கப்படுபவர்.

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

धार्यते येन विश्वं सदाजादिकं वार्यतेऽशेषदुःखं निजध्यायिनाम् ।
पार्यते सर्वमन्यैर्न यत्पार्यते कार्यते चाखिलं सर्वभूतैः सदा ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (9)

தார்யதே யேன விஸ்வம் ஸதாஜாதிகம்
வார்யதேஸேஷ துஃகம் நிஜ த்யாயினாம் ।
பார்யதே ஸர்வ மன்யைர் ந யத் பார்யதே
கார்யதே சாகிலம் ஸர்வ பூதைஸ் ஸதா ।
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ॥

9. ப்ரம்மா முதலியோருடைய உலகனைத்தையும் என்றும் தாங்குபவர். தம்மை த்யானிப்பவரின் ஸகல துக்கங்களையும் போக்கடிப்பவர். வேறு ஒருவராலும் செய்யமுடியாத காரியத்தைச் செய்து முடிப்பவர்.

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

सर्वपापानि यत्संस्मृतेः संक्षयं सर्वदा यान्ति भक्त्यया विशुद्धात्मनाम् ।
शर्वगुर्वादिगीर्वाणसंस्थानदः कुर्वते कर्म यत्प्रीतये सज्जनाः ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (10)





ஸர்வ பாபானி யத் ஸம்ஸ்ம்ருதே: ஸம்க்ஷயம்
ஸர்வதா யாந்தி பக்த்யா விஸுத்தாத்மனாம் |
ஸர்வ குர்வாதி கீர்வாண ஸம்ஸ்தானத:
குர்வதே கர்ம யத்ப்ரீதயே ஸஜ்ஜனா: |
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா
மண்டலா கண்ட மண்டனம் ||

10 பக்தியினால் பரிசுத்தமடைந்த மனதை உடையவர்களின் எல்லாப் பாபங்களும் அவரை நினைத்த மாத்திரத்தில் போய்விடும்.

அவருடைய அனுக்ரஹத்திற்காக ஸாதுக்கள் கர்மாவைச் செய்கின்றனர். பிரம்மா முதலானோர்களுக்கும் மோக்ஷம் அருள்பவர் இவரே.

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

अक्षयं कर्म यस्मिन् परे स्वर्पितं प्रक्षयं यान्ति दुःखानि यन्नामतः ।
अक्षरो योऽजरः सर्वदेवामृतः कुक्षिगं यस्य विश्वं सदाजादिकम् ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (11)

அக்ஷயம் கர்ம யஸ்மின் பரே ஸ்வர்பிதம்
ப்ரக்ஷயம் யாந்தி துஹ்கானி யன்னாமத: |
அக்ஷரோ யோஜர: ஸர்வதேவாம்ருத:
குக்ஷிகம் யஸ்ய விஸ்வம் ஸதாஜாதிகம் |
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ||

11. யாருக்கு அர்ப்பணம் செய்தால் ஸகல கர்மாக்களும் அழிவற்ற பலனைக் கொடுப்பவையாகுமோ, யாருடைய நாம ஸங்கீர்த்தனத்தால் துக்கங்கள் தொலையுமோ, எவர் குறைவற்றவரோ, எப்பொழுதும் யௌவன

தசையில் இருப்பவரோ, என்றும் நாசமற்றவரோ, யாருடைய வயிற்றில் ஸத்யலோகம் உள்பட எல்லாம் அடங்கியுள்ளதோ,

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

नन्दितीर्थोरुसन्नामिनो नन्दिनः सन्दधानाः सदानन्ददेवे मतिम् ।
मन्दहासारुणापाङ्गदत्तोन्नतिं नन्दिताशेषदेवादिवृन्दं सदा ।
प्रीणयामो वासुदेवं देवतामण्डलाखण्डमण्डनं ॥ (12)

நந்தி தீர்த்தோரு ஸன்னாமினோ நந்தின:
ஸந்ததானா: ஸதானந்த தேவே மதிம் ।
மந்தஹாஸாருணாபாங்க தத்தோன்னதிம்
நந்திதாஸேஷ தேவாதி வ்ருந்தம் ஸதா ।
ப்ரீணயாமோ வாஸுதேவம் தேவதா மண்டலா
கண்ட மண்டனம் ॥

12. ஆனந்ததீர்த்தர் என்று உயர் பெயருடைய நாம் பிரம்மஸாக்ஷாத்காரம் செய்து, பரமானந்தம் நிரம்பியவராய், ஆனந்தமயமான தேவனிடத்தில் மனதை வைத்து, மந்தஹாஸத்துடன் கூடிய சிவந்த கடாக்ஷத்தால் உயர்வைக் கொடுப்பவரும், ஸகல தேவதைகளையும் த்ருப்தி செய்பவருமாகிய வாஸுதேவனை மகிழ்விப்போமாக.

தேவமண்டலத்திற்கு என்றும் அழியாத அலங்காரமாக விளங்குபவருமான வாஸுதேவனை மகிழ்விப்போமாக.





## ஒன்பதாம் அத்யாயம்

अतिमततमोगिरिसमितिविभेदन पितामहभूतिद गुणगणनिलय ।
शुभतमकथाशय परम सदोदित जगदेककारण
राम रमारमण ॥ (1)

அதிமத தமோ கிரி ஸமிதி விபேதன
பிதாமஹ, பூதித குணகண நிலய |
ஸுபதம கதாஸய பரம ஸதோதித
ஜகதேக காரண ராம ரமா ரமண ||

1. ஸர்வோத்தமனே! அஞ்ஞானமெனும் மலையைப் பிளப்பவரே! பிரம்ம தேவனுக்கு ஞானம் ஆனந்தம் முதலிய மங்களங்களைக் கொடுப்பவரே! குணகணங்களுக்கு இருப்பிடமானவரே!

மங்களகரமான கதைகளுக்கு உள்ளுணர்வு ஹிருதயம் போன்றவரே! பரமனே! எப்பொழுதும் ப்ரஸன்னமானவரே! உலகிற்கு முக்கிய காரணமானவரே! அழகானவரே! ரமாரமணா!

विधिभवमुखसुरसततसुवन्दित रमामनोवल्लभ भव मम शरणम् ।
शुभतमकथाशय परम सदोदित जगदेककारण राम रमारमण ॥ (2)

விதிபவ முகஸுர ஸதத ஸுவந்தித
ரமாமனோவல்லப பவ மம சரணம் |
ஸுபதம கதாஸய பரம ஸதோதித
ஜகதேக காரண ராம ரமா ரமண ||

2. பிரம்மா, ருத்ரன் முதலிய தேவர்களால் என்றும் நன்கு வணங்கப்பட்டவரே! ஸ்ரீ தேவியின் உகந்த மணாளரே! எனக்கு அடைக்கலம் கொடுப்பீராக.

மங்களகரமான கதைகளுக்கு உள்ளுணர்வு ஹிருதயம் போன்றவரே! பரமனே! எப்பொழுதும் ப்ரஸன்னமானவரே! உலகிற்கு முக்கிய காரணமானவரே! அழகானவரே! ரமாரமணா!

अगणितगुणगणमयशरीर हे विगतगुणेतर भव मम शरणम् ।

शुभतमकथाशय परम सदोदित जगदेककारण राम रमारमण ॥ (3)

அகணித குணகணமய ஸரீர
ஹே விகத குணேதர பவ மம சரணம் |
ஸுபதம கதாஸய பரம ஸதோதித
ஜகதேககாரண ராம ரமா ரமண ||

3. எண்ணற்ற குணகணங்களாலாகிய சரீரத்தை உடையவரே! தோஷமற்றவரே!

மங்களகரமான கதைகளுக்கு உள்ளுணர்வு ஹிருதயம் போன்றவரே! பரமனே! எப்பொழுதும் ப்ரஸன்ன மானவரே! உலகிற்கு முக்கிய காரணமானவரே! அழகானவரே! ரமாரமணா!

अपरिमितसुखनिधिविमलसुदेह हे विगतसुखेतर भव मम शरणम् ।

शुभतमकथाशय परम सदोदित जगदेककारण राम रमारमण ॥ (4)

அபரிமித ஸுகநிதி விமலஸுதேஹ
ஹே விகதஸுகேதர பவ மம சரணம் |
ஸுபதம கதாஸய பரம ஸதோதித
ஜகதேககாரண ராம ரமா ரமண ||

4. எல்லையற்ற ஸுகத்தின் பொக்கிஷம் போன்றதும், சுத்தமானதும், ஸுந்தரமானதுமான தேஹத்தை உடையவரே! துக்கமற்றவரே!

மங்களகரமான கதைகளுக்கு உள்ளுணர்வு ஹிருதயம் போன்றவரே! பரமனே! எப்பொழுதும் ப்ரஸன்னமானவரே! உலகிற்கு முக்கிய காரண மானவரே! அழகானவரே! ரமாரமணா!





प्रचलितलयजलविहरण शाश्वतसुखमयमीन हे भव मम शरणम् ।
शुभतमकथाशय परम सदोदित जगदेककारण
राम रमारमण ॥ (5)

ப்ரசலித லய ஜல விஹரண ஸாஸ்வத
ஸுகமய மீன ஹே பவ மம சரணம் ।
ஸுபதம கதாஸய பரம ஸதோதித
ஜகதேககாரண ராம ரமா ரமண ॥

5. ப்ரளயகால ஜலத்தில் விளையாடுபவரே! சாஸ்வதமான ஸுகரூபத்தை உடைய மத்ஸ்யாவதார மூர்த்தியே!

மங்களகரமான கதைகளுக்கு உள்ளுணர்வு ஹிருதயம் போன்றவரே! பரமனே! எப்பொழுதும் ப்ரஸன்னமானவரே! உலகிற்கு முக்கிய காரணமானவரே! அழகானவரே! ரமாரமணா!

सुरदितिजसुबलविलुलितमन्दरधर वरकूर्म हे भव मम शरणम् ।
शुभतमकथाशय परम सदोदित जगदेककारण राम रमारमण ॥ (6)

ஸுர திதிஜ ஸுபல விலுலித
மந்தரதர வரகூர்ம ஹே பவ மம சரணம் ।
ஸுபதம கதாஸய பரம ஸதோதித
ஜகதேககாரண ராம ரமா ரமண ॥

6. தேவர்களும் அரக்கர்களும் மிகுந்த பலத்துடன் கடையப்பட்ட பாற்கடலைக் கடைக்கும் மத்தான மந்தர பர்வதத்தைத் தாங்கியவரே! கூர்மாவதார மூர்த்தியே!

மங்களகரமான கதைகளுக்கு உள்ளுணர்வு ஹிருதயம் போன்றவரே! பரமனே! எப்பொழுதும் ப்ரஸன்னமானவரே! உலகிற்கு முக்கிய காரணமானவரே! அழகானவரே! ரமாரமணா!

सगिरिवरधरातलवह सुसूकर परम विबोध हे भव मम शरणम् ।
शुभतमकथाशय परम सदोदित जगदेककारण राम रमारमण ॥ (7)

